# நல்ல வேளை,
# சில பொருட்கள் என்றும் மாறுவதே இல்லை!

பாசத்திலே சிறந்தது தாய்ப்பாசம். துணிகளின் சிறப்பிலே உயர்ந்தது பின்னி. இவை என்றும் மாறா மதிப்புள்ளவை. இவை இரண்டுமே இணையற்ற ஒரு ஜோடி என்று நீங்களே ஒப்புக்கொள்வீர்கள்.

காலத்திற்கேற்ற மனப் போக்குள்ள இளம்தாய் கூட விடாப்பிடியாக பின்னி டெரீன் இழைகலந்த துணிகளையே வேண்டுமென்பர். காரணம் பின்னி கடுமையாக உழைத்து, நீங்கள் தரும் பணத்துக்கு ஏற்றதாய் இருப்பவை. இந்த நாட்களில் அவற்றை விரும்பாதவர் யார்.

பின்னி கூட என்றும் மாற்ற விரும்பாத சில பொருட்கள் உள்ளன!



**பின்னி** டெரீ

நாகரீகம், அத்துடன் நீடித்தும் உழைப்பவை — பின்னி மட்டுமே நயமுடன் இணைத்துத்தர முடியும்!

Interpub BB/54/75 Tam

# கல்கி

ராக்ஷஸ ஆவணி 15
ஆகஸ்டு 31, 1975

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



ராஜி-ரோஸி














## காஞ்சியில் புதிய ஜவுளி ஷோ-ரூமுக்கு

விஜயம் செய்யுங்கள்!



காஞ்சிபுரம் பட்டு சரிகை சேலைகள்
கைத்தறி நூல் சேலைகள் & நவீன மில்
ஜவுளிகள் வாங்க நம்பிக்கையான இடம்

ஸ்ரீ லக்ஷ்மி விலாஸ்

# A. அருணாசல முதலியார்

பட்டு சரிகை சேலை & மில் ஜவுளி வியாபாரம்

போன்: கடை: 2502 - இல்லம்: 2790

340-B, காந்தி ரோடு, காஞ்சிபுரம்-631501

காதல் - முள் இல்லாத ரோஜா!
கல்யாணம் - ரோஜா இல்லாத முள்!











எங்கப்பா!







வாங்கிக்கோ சார்.
கரும்பு வில்...
மலர் அம்பு..
அஞ்சு ரூபா சார்!

காதலர் பாதை





காதலன்: (டாக்ஸி டிரைவர்) என்ன, என்னை வெயிட்டிங்லே போட்டுட்டே! நாற்பத்தைந்து நிமிடமாக உனக்காகக் காத்துக்கிட்டிருக்கேன்!

மன்மதன்: இந்தக் காலத்து மனிதர்களின் காதல் வேகத்துக்கு ஈடுகொடுத்து என்னுலே மலர்க்கணை போட முடியவில்லை! 'ஓவர் டைம்' வேலை செய்து உடம்பு ஓடாகப் போய்விட்டது !





"உனக்கு பாட்மின்டன், ரிங்டென்னிஸ், ஷட்டில் காக், வாலிபால், டேபிள் டென்னிஸ்... இந்த கேம் தான் பிடிக்கும்னு ஏன் சொல்றே?"

"அதுவா? ஆரம்பிக்கும் போதே 'லவ் ஆல்'னு சொல்றாங்களே !"



"என்ன கமி! ஹனிமூன் வந்த இடத்திலும் 'பப்பிள் கம்' என்ஜாய் பண்ணிக் கொண்டு...."



வாழ்க்கையில் அதிர்ஷ்டமுள்ள ஆடவர் ஒருவரை மீண்டும் சந்திக்கும்போது...

**...அவர் அணிந்துள்ள ஆடைகளின் அழகையும் பாருங்கள்!**



*நிச்சயமாக, மபத்லால் குரூப் அளிப்பவை பொருத்தமான துணிமணிகள்தான்!*

# ஜனநாயக சிந்தனை

"எங்கள் நோக்கம் ஏக கட்சி ஆட்சியல்ல; எதிர்க்கட்சிகளுக்கு இந்தியாவில் இடம் உண்டு" என்று அறுதியிட்டு உறுதி கூறியுள்ளார் பிரதமர்.

நமது மாநில முதலமைச்சர் இதனை உடனே வரவேற்று மகிழ்ந்து பேசத் தவறவில்லை.

நெருக்கடி நிலைப் பிரகடனம் அமுலில் இருக்கும்போது பிரதமரின் இதுபோன்ற அறிக்கைகள் மிக முக்கியமான பணியாற்றுகின்றன. மக்களிடம் நம்பிக்கையையும் ஜனநாயகப் பற்றையும் வளர்க்கின்றன.

ஜனநாயகத்தில் எதிர்க்கட்சிகளின் பணியைக் காரின் பிரேக்குகளுக்கு ஒப்பிடுவார் ராஜாஜி. ஆட்சி வேகமாகச் செல்லும்போது, எதிர்க்கட்சி அதனை நிதானப்படுத்தும். எனவே எதிர்க் கட்சி, ஜனநாயகத்தில் இன்றியமையாதது.

கல்கி

மலர் 35
இதழ் 5



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்

ஆனால் இதற்கு மறு பக்கமும் உண்டு. பிரேக் தேவையான சமயத்தில் தேவையான இடத்தில் மட்டுமே பிடிக்க வேண்டும்.

இம்மாதம் 16ந் தேதி சனிக்கிழமை இரவு மதுரை நோக்கிச் சென்ற பாண்டியன் எக்ஸ்பிரஸ் ஒரு மணி நேரம் தாமதமாகப் போய்க் கொண்டிருந்தது. காரணம் விசாரித்தபோது, 'பிரேக் விடுபடமாட்டேன் என்கிறது' என்றார் கார்டு.

அதாவது, அவசியமான ஒரு சமயத்தில் போடப்பட்ட பிரேக் பிறகு விலகிக் கொள்ளவே இல்லை. சதா பிடிப்புடன் இருந்து ரயிலின் ஓட்டத்தையே தடை செய்தது.

இத்தகைய பிரேக் நமது ஜனநாயகத்துக்கு வேண்டாம் என்கிறார் பிரதமர். அமைதியான பிரசார சாதனங்கள் மூலம் மக்கள் அபிப்பிராயத்தை உருவாக்குவதுடனும் சட்டமன்ற நாடாளுமன்றங்களில் ஆட்சியிலிருப்போருக்கு நல்லதை எடுத்துச் சொல்வதுடனும் எதிர்க்கட்சிகள் நிற்க வேண்டும். இது நன்றாக இயங்கும் பிரேக்.

ஆளும் கட்சியும், எதிர்க்கட்சி உறுப்பினர் எண்ணிக்கை சிறுபான்மையாக இருந்தாலும், அது தெரிவிக்கும் கருத்துக்களுக்கு மதிப்பளித்து நடந்து கொள்வது ஜனநாயக முறை.

எதிர்க் கட்சிகள் எதற்கெடுத்தாலும் ஹர்த்தால், வேலை நிறுத்தம், புரட்சி, இயக்கம் என்றெல்லாம் மக்களைக் குழப்பிக் கொண்டேயிருந்தால் அது நாட்டின் முன்னேற்றத்தையே தடை செய்யும் பிரேக் ஆகிறது—சனிக்கிழமை இரவு பாண்டியன் எக்ஸ்பிரஸின் முன்னேற்றம் தடைப்பட்டதுபோல.

சுதந்திரக் கட்சி உறுப்பினர்கள் நேரிடை நடவடிக்கைகளில் இறங்க வேண்டும் என்று கூறியபோதெல்லாம் ராஜாஜி "அம்முறை 1947 ஆகஸ்டு பதினைந்துடன் முடிந்துவிட்டது: சுதந்திர ஜனநாயகத்தில் கருத்துக்களைப் பேசித்தான் — சட்டசபைகளிலும் நாடாளுமன்றத்திலும் பேசித்தான் — ஆட்சிக்கு மக்கள் மனநிலையை உணர்த்த வேண்டும்" என்று கூறி வந்தார். நேரடி நடவடிக்கைக்கு முழு எதிர்ப்புத் தெரிவித்து வந்தார்.

எனவே ஜனநாயகத்தில் ஆட்சி எவ்வளவு ஒழுக்கத்துடன் நடந்து கொள்ள வேண்டும் என்று எதிர்பார்ப்போமோ அதே அளவு ஒழுக்கம் எதிர்க் கட்சிகளிடமும் வேண்டும்.

# முதல்வரின் முதல்தர அறிக்கை

பாரீஸ் கோபுரக் கோலாகலத்தையும், கொட்டும் மழையிலும் கட்டுப்பாடுடன் நின்று சொற்பொழிவுகளைக் கேட்ட மக்களின் ஆர்வத்தையும் வியந்து நோக்கிவிட்டு விஷயத்துக்கு வந்தோமானால், விலைவாசிகள் தம் முகத்தில் குறைந்துள்ளதை முதல்வர் புள்ளி விவரங்களுடன் நிரூபிக்க முற்பட்டதுதான் சேலம் தி. மு. க. மகாநாட்டில் முக்கியமான அம்சமாகிறது.

விலைவாசிகள் குறைந்துள்ளன என்று கூறிய முதல்வர், வேறு ஓர் இடத்தில் விலைவாசிகள் குறைவது முக்கியம்தான்; ஆனால் மக்களின் வாங்கும் சக்தி அதிகரிக்க வேண்டியது அதை விட முக்கியம் என்று சொன்னார். தேர்ந்த பொருளாதார நிபுணர் போல் அழகாகக் கூறினார்.

ஒரு நாட்டின் சுபிட்சம் மக்களின் சராசரி வருமானத்தைப் பொறுத்துக் கணக்கிடப் படுகிறது. மக்களின் சராசரி வருமானம் அதிகமா குறைவா என்பதற்கு அந்த வருமானத்தின் வாங்கும் சக்தியே அளவுகோல். இதையே வாழ்க்கைத்தரம் என்றும் கூறலாம்.

இத்தகைய சுபிட்சம் நாட்டில் ஏற்பட முதல்வர் கூறிய பாணியிலேயே மேலும் சிலவும் சொல்லி அவை நடக்குமாறும் செய்ய வேண்டும்.

இத்தனை தொழிலகங்களை நிறுவினோம் என்று கணக்குச் சொன்னால் போதாது; அங்கே எத்தனை மக்களுக்கு வேலை வாய்ப்புக் கிடைத்திருக்கிறது என்று பார்க்க வேண்டும்.

இத்தனை இயந்திரங்களை நிறுவியிருக்கிறோம் என்று பெருமைப்பட்டால் போதாது; அவற்றின் முழு ஆற்றலும் பயன்படுத்தப்படுகின்றனவா என்று கவனிக்க வேண்டும்.

இத்தனை கோடி தொழிலகங்களில் முதலீடு ஆகியுள்ளது என்று புள்ளி விவரம் சொன்னால் போதாது; எத்தனை சதவீதம் லாபம் கிடைத்திருக்கிறது என்றும் கணிக்க வேண்டும். லாப நோக்கு அருவருக்கத்தக்கதல்ல. சுபிட்சத்துக்கு வழி என உணர வேண்டும்.

இவ்வளவு ஏற்றுமதி செய்தோம் என்று பெருமைப்பட்டால் போதாது; அயல்நாட்டு உற்பத்தியாளருடன் போட்டி போட்டுக் கொண்டு குறைந்த அடக்க விலைக்கு உற்பத்தி செய்தோமா என்று பார்க்க வேண்டும். ஏற்றுமதிக்கென விலையைக் குறைத்துவிட்டு நஷ்டத்தை ஈடுகட்ட உள்நாட்டில் அப்பண்டத்தின் விலை உயர்வை அனுமதிக்கக் கூடாது.

விவசாயிகளுக்கும் சிறு தொழில்களுக்கும் பாங்குகள் இத்தனை கோடி கடன் கொடுத்துள்ளன என்று கணக்குச் சொன்னால் போதாது; வாங்கப்பட்ட கடன் உற்பத்திப் பெருக்கத்துக்கு உண்மையில் உதவியிருக்கிறதா என்று பார்க்க வேண்டும். பாங்குகளில் கடன் பெற்ற சில சிறு தொழில் நிறுவனங்கள் காகிதத்தில் பெயரளவில்தான் உள்ளன என்ற செய்தி வருந்தத்தக்கது ஆகும்.

தனியார் துறை இயங்கத் தடையில்லை என்று சொன்னால் போதாது; அவை மேலும் திறம்பட இயங்கச் சில கட்டுப்பாடுகளைத் தளர்த்த வேண்டும்.

அயல்நாட்டு முதலீட்டை வரவேற்பதாகச் சொன்னால் போதாது; அவர்கள் பணத்துடன் இங்கே வருவதற்குச் சாதகமான சூழலை ஊக்குவிக்க வேண்டும்.

தொழிலகங்களில் முதலீடு பெருக வேண்டும் என்று கூறினால் போதாது; அதற்கு அனுசரணையாகச் சேமிப்புப் பெருக வழி காண வேண்டும்.

உரிமைகளுக்குத் தொழிலாளர் தலைவர்கள் குரல் கொடுத்தால் போதாது; கடமைகளைத் தொழிலாளர்கள் சரிவரச் செய்கிறார்களா என்றும் தொழிற்சங்கத் தலைவர்கள் கவனிக்க வேண்டும்.

இத்தகைய சிறந்த சூழலை உருவாக்க வாய்ப்பான சந்தர்ப்பம் இன்று அரசுக்கும் மக்களுக்கும் இருக்கிறது. பயன்படுத்திக் கொள்வோம்.

---

ராஜாஜி சிந்தனை

## அடிப்படை உண்மை

தேசத்தின் செல்வம் அதிகரிக்க வேண்டும் என்று நிறையப் பேசுகிறார்கள். ஆனால் எல்லாச் செல்வத்துக்கும் அடிப்படைக் காரணம் தனிமனிதனின் சக்திதான் என்பதை எத்தனை பேர் ஞாபகம் வைத்திருக்கிறார்களோ தெரியவில்லை. தனிமனிதனின் செல்வமானாலும் சரி, தேசியச் செல்வம் என்று கூறப்படுகிற செல்வமானாலும் சரி, எல்லாம் தனி மனிதர்களின் முயற்சியாலேயே உருவாக வேண்டும். தனிமனிதனின் சக்தியின்றித் தேசிய செல்வத்தை உற்பத்தி செய்யவே முடியாது. இந்த அடிப்படை உண்மையை உணர்ந்தோமானால் அடுத்தாற்போல் எழும் கேள்வி, 'தனிமனிதனின் சக்தி அதிகப்பட்ச அளவில் ஆக்கபூர்வமாக வெளிப்படுமாறு எப்படிச் செய்வது?' என்பதுதான்.

இதை இரண்டு விதமாகச் செய்யலாம். வெளியேயிருந்து ஏதோ ஒருவிதமாகத் தனிமனிதனைக் கட்டாயப்படுத்தலாம். அல்லது தனிமனிதன் தானாகவே முன்வந்து சுதந்திரமாகத் தனது சக்தியை ஆக்கபூர்வமாகப் பிரயோகிக்க ஏதேனும் ஒரு விதத்தில் தூண்டுதல் அளிக்கலாம்.

— சுயராஜ்யா ஆகஸ்டு 24, 1963

# உம்மிடி சாரதி ஜுவல்லர்ஸ்

அளிக்கும்

# நகை சேமிப்புத் திட்டம்



ரூ.3000, ரூ.1500 குருப்புகள்

பெரு மதிப்புக்குரிய ஆதரவாளர்களுக்கு உம்மிடி சாரதி ஜுவல்லர்ஸ் மிகப் பெருமையுடன் அளிக்கும் புதிய நகை சேமிப்புத் திட்டம். இரு வகை குருப்புகள்: ரூ. 3000, ரூ 1500. மாதத் தவணை ரூ. 200, ரூ. 100. இது 15 மாதத் திட்டம், ஒவ்வொரு குருப்புக்கும் மொத்த அங்கத்தினர்கள் 100 மட்டுமே. பிரதி மாதமும் 15 தேதி அளவில் அதிர்ஷ்டசாலிகள் தேர்ந்தெடுக்கப்படுவர். அவர்கள் மேற்கொண்டு மாதத் தவணைகளுக்கு பணம் செலுத்த வேண்டியதில்லை. வெற்றி பெற்றவர்கள் தங்கள் பணத்திற்குரிய தேவையான தங்க நகைகளையோ, வெள்ளிப் பொருட்களையோ தேர்ந்தெடுக்கலாம்.

## அரிய பரிசு!

சேரும் மெம்பர்களுக்கு முதல் தவணை செலுத்திய உடனேயே ஒரு அழகிய வெள்ளி குத்துவிளக்கு பரிசாகக் கொடுக்கிறோம்.

ADWAVE-VSJ-303



மேற்கொண்டு விபரங்களுக்கு:

## உம்மிடி சாரதி ஜுவல்லர்ஸ்

40. பாண்டி பஜார், மாம்பலம்.
சென்னை-600.017. போன்: 442500

- ஞாயிற்றுக்கிழமை கடை திறந்திருக்கும்.
- செவ்வாய்க்கிழமை விடுமுறை

# உங்கள் குறைவும் என் நிறைவும்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

1



(1957-ம் ஆண்டு செப்டம்பர் 23ந் தேதி சென்னைக்கு வருகை புரிந்த ஸ்ரீ பெரியவர்கள் அதன் பின் ஒன்றரை ஆண்டுகள் மாநகரின் பல பேட்டைகளில் பொன்னடி சாத்திப் பட்டணத்தைப் பூலோக கைலாசமாக்கினார்கள். 1959 மார்ச் 15ந் தேதி அவர்கள் இங்கிருந்து விடை கொண்டபோது நடைபெற்ற பிரிவுபசார விழாவில் தமது திருவுள்ளம் திறந்து ஓர் அமர உரையை அடக்கத்தின் பெட்டகமாக அருளினார்கள். அதனை இவ்விதழிலிருந்து தொடராக அளிக்கிறோம்.)

இந்தப் பிரிவுபசாரத்தில் பலர் பேசினார்கள்; சிலர் எழுதி வாசித்தார்கள். அவர்கள் சொன்ன புகழ் மொழி எல்லாம் அவரவர்கள் உணர்ச்சி வசத்தில் தோன்றியது. அந்த அளவில் பார்த்தால் சொன்னது, படித்தது எல்லாம் நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் எதிலும் நமக்கு ஏதாவது ஒரு குறை தோன்றினால், அதை ஒளிக்காமல் எடுத்துக் காட்ட வேண்டும். அந்த ரீதியில் இந்தப் பேச்சுக்களில் ஒரு குறையை நான் எடுத்துச் சொல்ல வேண்டியிருக்கிறது.

என்ன குறை? பேசினவர்கள் அவ்வளவு பேரும் என்னை ஸ்தோத்திரம் செய்ததோடு இன்னொரு விஷயத்தைச் சேர்த்துக்கொண்டே போயிருக்கிறார்கள். 'ஸ்வாமிகள் ஒரு வருஷத்துக்கு மேலாக அநேக உபந்நியாசங்கள் பண்ணி வந்திருக்கிறார். அந்த உபந்நியாசங்களில் அவர் சொன்னபடி இனிமேலாவது நாம் நடக்க வேண்டும். இதுதான் அவருக்கு நாம் செய்கிற கைம்மாறு' என்ற அபிப்பிராயத்தைப் பேசினவர்கள் ஒவ்வொருவரும் தெரிவித்திருக்கிறார்கள். இப்படி ஏகோபித்துச் சொல்ல வேண்டும் என்று அவர்கள் முன்னதாகக் கலந்து பேசிக் கொள்ளவில்லை. அவரவரும் பேசுகிறபோதே, தாங்களாகவே இப்படித் தோன்றிச் சொல்லியிருக்கிறார்கள். இது ஒன்றை மாத்திரம் சொல்லாமலிருந்திருந்தால் எனக்கு இன்னமும் திருப்தியாக இருந்திருக்கும்.

என் திருப்திக்காகத்தான் இவ்வளவு கொண்டாடிப் பேசியிருக்கிறார்கள். இந்த ஒரு விஷயம் மாத்திரம் எனக்கு அப்படியில்லை. சொல்லியாச்சு. 'சொல்லாமல் இருந்திருந்தால் திருப்தியாக இருக்கும்' என்று இப்போது நான் சொல்வதில் அர்த்தம் இல்லைதான். அதனால், இதையே கொஞ்சம் வேறு தினுசாக மாற்றிச் சொல்கிறேன்: நான் சொன்னதை நீங்கள் கேட்டு நடக்கவில்லை என்று வருத்தப்பட்டுக் கொண்டு' இனிமேலாவது எனக்கு ஏதோ கைம்மாறு செய்ய வேண்டும் என்று சொன்னார்களே, இந்த அபிப்பிராயத்தை இனிமேல் யாரும் **நினைக்காமல் இருந்து விட்டால்** போதும். உங்களைப் பற்றி உங்களுக்கே குறையும் வேண்டாம், எனக்கு கைம்மாறு செய்ய வேண்டும் என்பதும் வேண்டாம்.

இத்தனை நாள் நான் உபந்நியாசம் பண்ணினேன். 'இனிமேலாவது அவற்றில் ஓர் அம்சத்தையாவது நாம் எடுத்துக்கொண்டு காரியத்தில் செய்ய வேண்டும்' என்பது சொன்னால் இதுவரை செய்யவில்லை என்றுதான் அர்த்தம். 'நமக்கு நடுவில் அவர் உட்கார்ந்து கொண்டு சொன்னபோதே கேட்காதவர்கள், அவர் போன பிறகு செய்யப் போகிறோமா?' என்றுதான் உங்களுக்குத் தோன்றும். குறை ஜாஸ்தியாகும். அப்படியெல்லாம் குறையே படவேண்டாம்.

'கைம்மாறை'ப் பொறுத்தமட்டில்: நாம் சொல்வதை எல்லாரும் செய்வார்கள், செய்ய வேண்டும் என்று நான் எதிர்பார்த்தால்தான் 'கைம்மாறு' விஷயமே வருகிறது. நாம் சொல்வதை எல்லாம் ஜனங்கள் கேட்டாக வேண்டும் என்று நான் நினைத்தால் நான் காரியத்தைச் செய்யத் தெரியாதவன் என்றுதான் அர்த்தம். இப்படிக் கணக்குப் பார்த்துக் காரியம் செய்ய முடியாது. அத்தனை பேரும் நான் சொன்ன சாஸ்திர வழிக்குத் திரும்பியே ஆக வேண்டும் என்று நினைத்தால் அது சாத்தியமில்லை.

இப்போது இருக்கப்பட்ட லோக வாழ்க்கையில் எத்தனையோ இடைஞ்சல்கள், குழறுபடிகள் வந்து சேர்ந்துவிட்டன. இத்தனைக்கு நடுவில், முதலில் சாஸ்திரம் சொல்வதில் நம்பிக்கை வருவதே பெரிசு. முதலில் அந்த நம்பிக்கை வர வேண்டும். வந்த பிறகும் அநுஷ்டித்துக் காட்டுவது என்று வருகிற போது, சாஸ்திரப் பிரகாரம் சில

போரால் சில காரியம் பண்ண முடியலாம்; சில முடியாமல் போகலாம். தர்ம சாஸ்திரப் படியே நடப்பது என்றால் அதில் வருகிற அநேக கஷ்டங்களை, அவமானங்களைப் பொறுத்துக் கொள்ள எல்லாராலும் முடியாதுதான். இந்தச் சிரமங்களையெல்லாம் நினைக்காமல் நான்பாட்டுக்கு, லெக்சர் பண்ணியே எல்லார் வாழ்க்கையையும் அடியோடு மாற்றிவிடலாம் என்று நினைத்திருந்தால் எனக்கு 'ப்ளானும்' தெரியவில்லை; 'பட்ஜெட்'டும் தெரியவில்லை என்றுதான் அர்த்தம். நான் அப்படி நினைக்கவும் இல்லை; அப்படி ஏதாவது துளி நினைத்திருந்தால்கூட அதை இப்போது வாபஸ் வாங்கிக் கொள்கிறேன்.

ஆனால் உலக சரித்திரத்தைப் பார்த்தால், ஒரு சில தனி மனிதர்களால், அவர்களுடைய உபதேசங்களால், நூல்களால் ஏராளமான ஜனங்களுடைய வாழ்க்கை முறையை மாற்ற முடிந்திருக்கிறது என்றும் தெரிகிறது. பூர்வத்தில் இருந்த மத ஸ்தாபகர்கள் இப்படிப்பட்டவர்கள்தான். அவர்கள் ஒவ்வொருவராலும் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு விதமான புரட்சி நடந்து அது ஜனக் கூட்டங்களையே மாற்றியிருக்கிறது. ஆனால், என் அபிப்பிராயம், இந்த மாறுதல்களை அவர்கள் 'லெக்சர்' பண்ணினதால் உண்டாக்கவில்லை. வெறும் உபந்நியாசத்தினால் ஒன்றுமே நடக்காது.

(தொடரும்)





காதல் வேறு; காமம் வேறு. Attraction வேறு; Affinity வேறு. இரு உடல்கள் இணைகையில் அதை Attraction என்றும் இரண்டு இதயங்கள் பின்னிப் பிணைகையில் அதை Affinity என்றும் கிரேக்க அறிஞர் பாஸானியஸ் (Pasanias) சொல்கிறார். "இளமையின் செழிப்பு மங்கியவுடன் 'உடற் காதல்' தீர்ந்துவிடும்" என்னும் அவரது கூற்று நம் நடைமுறை வாழ்க்கையில் மெய்யாவதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

காதலை 'இசைவு' என்றும் காமத்தை 'இச்சை' என்றும் தமிழ் இலக்கியம் சொல்கிறது. இச்சை என்பது ரொம்பவும் அசிங்கமான சொல். ஷாஜஹான் மும்தாஜிடம் கொண்டது காதல்; ராவணன் சீதையிடம் கொண்டது 'காமம்'. எது ஆழமானதோ, எது அமரத்துவம் பெற்றதோ, எது 'அகக் குரலின் எதிரொலியோ, எது அக ஒளியின் பிரதிபலிப்போ அது காதல் எனப்படும் என்று நம் இலக்கியம் சொல்கிறது.

"காதலுக்குட்பட்ட காதலர் படை ஒன்றை என்னிடம் கொடுங்கள். நான் உலகத்தை வென்று காட்டுகிறேன்" என்கிறார் பீட்ரஸ் என்னும் மற்றொரு கிரேக்க அறிஞர். "ஒரு காதலியின் எதிரில் தன் பலவீனங்களைக் காட்ட ஒரு காதலன் வெட்கப்படுகிறான்; கோழையும் வீரனாகிறான்" என்று அதற்கான காரணத்தையும் அவர் சொல்கிறார். அதாவது காதல் குண இயல்பையே மாற்றக் காண்கிறோம், அதனால்தான் மென்மையான உணர்வைக் 'காதல்' என்றும் கொடூரமான பசியைக் 'காமம்' என்றும் சொல்கிறார்கள்.

காதலைத் "தெய்வீக அழகுக்கான மனித இதயத்தின் பசி" என்கிறார் ஸாக்ரடீஸ்.(படம்) அழிகின்ற உடலில் அழியாத் தன்மை என்னும் விதைதனை அது நடுமாம். அந்த அழியாத் தன்மையால் ஒரு புனிதம் கிட்டுகிறது. அதுவே 'தெய்வீகம். நாம் அனுபவத்தில் கண்டதும் இந்த வகையான 'காதல்'தான்.

-- ஸ்ரீதர்-சாமா





தங்கம் ஆண்டவன் முன் சென்று விக்கித்து நின்றது.

படைத்தவன் கேட்டான்: "தங்கம்மா, பொன்னம்மா! உனக்கு என்ன குறை? ஏன் கண் கலங்குகிறாய்? உன்னை நெருப்பிலிட்டுக் காய்ச்சுகிறார்கள் என்ற வருத்தமா?"

"இல்லை, பரந்தாமனே. நெருப்பிலிடுவதால் நான் புடம் போட்டு வளர்கிறேன்; அதனால் பெருமைப்படுகிறேன்."

"பின் ஏன் வருத்தப்படுகிறாய்? ஆசாரியார் உன்னை இரும்புச் சுத்தியால் தட்டி, தட்டி, பட்டையாக நீட்டுகிறாரே, அதற்காகவா?"

"இல்லை, இல்லை; அது என் அனுசரித்துப் போகும் பெருந்தன்மையைக் காட்டுகிறது. அதனால் பெருமைப்படுகிறேன்." பரந்தாமன் விழிக்கிறான்.

"அந்தப் பட்டையைச் சிறிய துளையினுள் செலுத்திக் கம்பியாக உன்னை இழுக்கிறாரே, அந்த வேதனை தாங்கவில்லையா?"

"இல்லை, ஆண்டவனே! அதனால் நான் தங்கக் கம்பி ஆகி நல்ல இசைப்புக்கு உவமைப் பொருளாகிறேன்." படைத்தவனின் பொறுமைக்கு ஒரு சோதனை.

"பின் என்னதான்......"

"இவ்வளவு அருமையான என்னைத் தராசில் வைத்து நிறுக்கும்போது, எங்கோ காட்டில் தெறித்துக் கிடக்கும் குந்துமணியை வைத்தல்லவா எடை போடுகிறார்கள். அதை நினைத்துத்தான் வருந்துகிறேன்" என்றதாம் அந்தத் தங்கம்.

(கம்பன் விழாவில் கி. வா. ஜ. ஆற்றிய உரையிலிருந்து)

-மயிலை மூர்த்தி

# படித்தோம் சொல்கிறோம்!



படங்கள் :

மேலே : நா. பா.

கீழே : ஆதவன்



## பிரதிபிம்பம்



"இந்தப் பிரதிபிம்பத்தின் பதினான்கு கண்ணாடிகளில் சிறிதும் பெரிதுமாகப் பல்வேறு பிம்பங்களின் எதிர் விளைவுகளைக் காண்கிறீர்கள்" — இது ஆசிரியரின் முன்னுரையில் முதல் வாக்கியம். இதற்கு ஏற்ப ஒவ்வொரு சிறுகதையும் மனித இயல்புகளின் பலவித வர்ணக் கலவையாகவே விளங்குகிறது.

முதல் கதையான "பிரதிபிம்பம்" இரு தலைமுறைகளை இணைத்துக் காட்டுகிறது. முந்திய தலைமுறையின் சிறந்த நடிகையான மேனகா தேவியும், இளைய தலைமுறையின் புதிய நடிகை குமாரி ஜெயமாலாவும் சந்தித்து உரையாட ஒரு வாய்ப்பை ஏற்படுத்தியிருந்தார் ஒரு பத்திரிகாசிரியர். அதன் மூலம் ஓர் அழகிய சிறுகதை பிறக்கிறது; கருத்தாழமும் மிக்கதாகவும் இருக்கிறது.

அடுத்தது "குரோட்டன்ஸ்." முப்பத்தெட்டு வயது வரையில் 'குமாரி'யாகவே இருக்கும் ஒரு புகழ்பெற்ற நடிகையின் மனம் ஓரிரவில் அடைந்த ஞானோதயம்தான் கதையின் கரு.

"ஆயா! நீ பெருக்கறதுக்கு முன்னே அந்தத் தொட்டிச் செடிகளுக்குக் கொஞ்சம் தண்ணீர் ஊற்றிவிட்டு அப்புறம் பெருக்கு. நேற்று நான் ஊற்றினேன். அது போதாது போலிருக்கு..." என்று கூறுகிறாள் மேனகா.

வேலைக்காரியின் பதில், அவள் உள்ளத்தில் ஞான ஒளியை ஏற்றிவிடுகிறது.

"தண்ணீர் ஊத்தாததுனாலே கோளாறு இல்லீங்கம்மா. தொட்டியிலே மண் மாத்தணும். அடி மண் செத்துப் போச்சு. செடிக்கு வேர் ஊன்றதுக்கு இடம் இல்லே!"



"குழந்தைக்கு ஒரு தாய்" இரண்டாந்தாரம் பற்றிய கதை — ஆனால் இரண்டாந்தாரக் கதையல்ல. குழந்தையின் செயல்களைக் கொண்டே கதையை இயக்கியிருக்கிறார் ஆசிரியர்.

"காந்தி நூற்றாண்டு விழா" என்ற கதையில் ஆசிரியரின் காந்தியக் கொள்கைகளின் பிடிப்பு நன்கு வெளிப்படுகிறது. குடிகார நாச்சியப்பனின் மனமாற்றத்தை ஆசிரியர் சொல்லியிருக்கும் விதமே அபாரம்.

"ஒரு மான் + ஒரு வலை" ஒரு சிறந்த கதை. கல்லூரி மாணவிகளைக் கலாட்டா செய்து கொண்டிருந்த திமிர் பிடித்த மாணவன் ஒருவனுக்கு மாணவி மனோரஞ்சிதம் சூடு கொடுத்த விதம் பிரமாதம்!

"மறுபடியும் ஒரு மகிஷாசுர வதம்" என்ற கதை படிப்பவர்களை மெய்சிலிர்க்க வைக்கும்.

பிரதிபிம்பத்தில் உள்ள ஒவ்வொரு கதையிலும் கற்பனை கலந்திருந்தாலும் அத்தனையுமே வாழ்க்கையை ஏதாவதொரு விதத்தில் பிரதிபலிப்பதாகவே அமைந்திருக்கின்றன.

எழுதியவர்: நா. பார்த்தசாரதி, பிரசுரம்: தமிழ்ப் புத்தகாலயம், 576, பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, சென்னை—5. விலை: ரூ. 5—00.

— லோமாஸ்

## இரவுக்கு முன்பு வருவது மாலை

"என் அம்மாவுடைய அப்பாவும் அப்பாவுடைய அப்பாவும் ஒரு ரயிலின் பெட்டியில் தான் முதன் முதலாகச் சந்தித்துக் கொண்டார்களாம். வெகுநாட்களுக்குமுன் ஓடும் ரயிலில் என் தாத்தாக்கள் இருவரும் சந்தித்திராவிட்டால் என் அப்பாவும் அம்மாவும் ஒருவரையொருவர் கல்யாணம் பண்ணிக் கொண்டிருக்கமாட்டார்கள். நான் ஒருத்தி பிறந்தே இருக்க மாட்டேன்."

இப்படிச் சொல்லும் குஞ்சு ஒரு 'ஜெனரேஷன் காப்'பைப் பார்க்கிறாள். அடி நாளையும் இந்த நாளையும் எடை போட்டுப் பார்க்கும் அவள் உள்ளுக்குள்ளே ஓர் ஏக்கம் :

'முன்பின் தெரியாத ஒருவனுடன் நம்மைப் பிணைத்துக் கொண்டு திடீரென்று அவனுடன் எப்படி வாழ்க்கையைத் தொடங்குவது ? ரசிக உணர்ச்சி இல்லாதவனாகவோ, ஹாஸ்ய உணர்ச்சி இல்லாதவனாகவோ அல்லது முன் கோபக்காரனாகவோ அல்லது அரைக் கிறுக்காகவோ அசடாகவோ — இப்படி யாராவது ஒருவனுக்குத் தீர விசாரியாமல் வாழ்க்கைப்பட்டுவிட்டால் அப்புறம் என்ன செய்ய முடியும் ? கழற்றவே முடியாத விலங்கு, மாற்றவே முடியாத ஆயுள் தண்டனை ஆகிவிடுமே !'

எனவே, காதலித்துக் கல்யாணம் செய்து கொள்ள முடிவு செய்கிறாள். கமலா, ருக்கு, ஹேமா என்று எத்தனையோ தோழிகள் முன்னுதாரணங்களாகத் திகழ்கிறார்கள் !

இப்படியாகக் காதல் கல்யாணத்தில் உள்ள வெற்றி — தோல்விகளும் நிறை — குறைகளும் ஆராயப்படுகின்றன.

அவள் வேலைக்குப் போக ஆசைப்படுகிறாள். வேலைக்குப் பதிலாகக் கணவனே கிடைத்து ஜாம் ஜாம் என்று கல்யாணம் நிறைவேறுகிறது.

ஒரு பெண்ணின் மனம் சிறகடித்துப் பறப்பதை ஓர் ஆணின் எழுதுகோல் அற்புதமாகப் படம் பிடித்துக் காட்டுகிறது என்றால், அவர் எத்தனை நுணுகி அதைப் பயின்றிருக்க வேண்டும்? 'சிறகுகள்' என்னும் நெடுஞ் சிறுகதையில், இப்படி வியக்க வைக்கும் ஆதவன், 'இரவுக்கு முன்பு வருவது மாலை'யில், இறுக்கமாகச் சுற்றியிருந்த புடவையின் காரணமாக நடையின் வீச்சு அவ்வப்போது தடைப்படுவதையும், தம்முடைய சுதந்திரம் கட்டுப்பட்டுவிட்டதற்கு எதிராகக் கண்டனம் தெரிவிப்பது போலப் பாதங்கள் இங்குமங்குமாகத் திமிற... ஒரு பெண் நடந்து வருவதைக் கண்டவன் கொண்ட காதலை அவனும் அவளுமே மாறி மாறிச் சொல்கிற உத்தியைக் கையாண்டு பின்னியிருக்கிறார்.

'அதோடு லேப்பே மெக்கானிக்கலா'கி விட்டதை அங்கத பாணியில் கூறுகிறார்:

'' அஸ்தமன சூரியனைப் பார்க்கும் நேரத்தில் ஓவர்டைம் செய்தால், பார்ட்டைம் செய்தால் அதிகப் பணம் கிடைக்கும். சூரியனைப் பார்ப்பதால் என்ன லாபம் ?''

ஆதவனின் எழுத்தில் ஓர் அழுத்தத்தைக் காண்கிறோம்; அணுகு முறையை ரசிக்கிறோம். அலுக்காமல் சொல்லிக் கொண்டு போகும் ஆற்றலை வியக்கிறோம். அதே போலப் பல இடங்களில் தெளிவற்ற நடை திரும்பத் திரும்பப் படிக்க வைத்துச் சோதிப்பதையும் உணருகிறோம். — ரா. வீ.

பிரசுரம்: இமயப் பதிப்பகம், நாகப்பட்டினம், விலை: ரூ. 10.00

## இளங்கோவின் பாத்திரப் படைப்பு

சிலப்பதிகார நூலை ஆராய்ச்சி செய்யப் புகுந்த இந்நூலாசிரியர் இளங்கோ அடிகளைப் பற்றிய வாழ்க்கை வரலாற்றுச் சான்றுகளிலிருந்தே அவரது காலத்தை நிர்ணயிக்க முயலுகிறார்.

காவிரியாறு கவேர முனிவரின் புதல்வி என்ற பொருளில், காவேரி என்று பெயர் பெற்றதும், திருவேங்கடமும், திருவரங்கமும், அழகர் மலையும், திருவனந்தபுரமும், வைணவ மதத்தில் பிரசித்தி பெற்றதும் சங்ககாலத்துக்குப் பிற்பட்ட நிகழ்ச்சிகள். இவை சிலப்பதிகாரத்தில் விளக்கமாகக் காணப்படுகின்றன. ஆகவே, சங்க காலத்துக்கு அடுத்த காலத்திலேயே இளங்கோ அடிகள் தோன்றி இக்காவியத்தை இயற்றியிருக்கிறார் என்ற கருத்தை உறுதியாகக் கூறுகிறார் ஆசிரியர். மேலும், பல சான்றுகளையும் தமது வாதங்களுக்கு அனுசரணையாக வழங்குகிறார்.

அடுத்து, சமண சமயத்தைச் சார்ந்தவரேயாயினும், அடிகள் அனைத்துச் சமயங்களையும் மதிக்கும் பெருந்தகையாளராக இருந்தவர் என்பதைத் தெளிவாகச் சிலப்பதிகாரக் காவியத்திலிருந்தே பல மேற்கோள்கள் காட்டி விளக்குகிறார்.

பிறகு, பாட்டுடைத் தலைவனாகிய கோவலனின் குணசித்திரத்தை அடிகள் எங்ஙனம் தீட்டுகிறார் என்பதை அழகாக விவரிக்கிறார்.

பெருங்குடி வணிகர்களிடையே பெருந் தனவந்தராக விளங்கிய மாசாத்துவான் என்னும் வள்ளல் பெருமகனின் மகனாக உதித்தவன் கோவலன். தன்னுயிர்க்கு இறுதி நேரினும் அஞ்சாத திண்மை உடையவன்; கொல்லா விரதத்தை மேற்கொண்ட அருக சமயத்தைச் சார்ந்தவன்; சூரிய அஸ்தமனத்துக்குப் பின்னர் உணவு கொள்ளாதவன்; ஆயினும், மற்ற மதங்களைப் பெரிதும் மதித்தான்; ஏனைய சமயங்களுக்குரிய தெய்வங்களையும் வழிபடும் அளவுக்கு அவன் மனம் விரிந்திருந்தது. கரம் பற்றிய மனைவியிடம் அவன் கொண்ட காதல் உரம் பற்றியதாயிருந்தது. ஆயினும் அவன் மாதவியை நாடிச் சென்றதை ஊழ்வினை என்று அடிகள் கூறியிருப்பதை ஆதரிக்கும் ஆசிரியர், மாதவியுடன் மனம் வேறுபட்டுத் தன் இல்லத்துக்கு மீண்டும் வந்து கண்ணகியைச் சந்திக்கும் பொழுது அவன் கண் கலுழ்ந்ததையும் மனம் வருந்தித் துடித்ததையும் கூறி அவன் மன நிலை கண்ணகியுடன் மறு வாழ்வு தொடங்க விரும்பியதை விளக்குகிறார்.

வள்ளன்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கிய வணிகன் மாநாய்கனது மகள் கண்ணகி. வனப்பின் வடிவமாக, திருமகளின் மறு பதிப்பாக, குணக் குன்றாக, கற்பினுக்கு அணியாக விளங்குகிறாள் அவள். பதிபக்தியோடு பரமன் பக்தியும் பெற்றவள். ரதியும் மன்மதனும் போலக் கணவனோடு வாழ்ந்தவள், கணவன் மாதவியின்பாற் சென்றதும் தவ வாழ்க்கையையே மேற்கொண்டாள். தாலியைத் தவிர ஏனைய நகைகளை நீக்கிவிட்டாள். திரும்பி வந்த கணவனிடம் கடுமொழி எதுவும் பேசவில்லை. அவன் விரும்பிய மறு வாழ்வுக்கு இசைவாகச் சிலம்பை ஈந்தாள். கண்ணகி செய்த உரிமைத் தியாகம். இதை அடிகளின் வாக்கிலிருந்தே ஆசிரியர் எடுத்து விவரித்திருக்கிறார். மற்றப் பாத்திரங்களைப் பற்றியும் 'துணைப் பாத்திரங்கள்' என்ற தலைப்பில் மிகவும் அழகாக விளக்கியிருக்கிறார். இந்நூலைப் படிப்பவர்கள் ஆசிரியரின் புலமை கண்டு வியந்து போவார்கள்.

சிலப்பதிகாரத்தை ஆழ்ந்து படிக்க எண்ணுபவர்கள் இந்நூலை முதலில் படித்து முடிப்பது பெருதவியாக இருக்கும்.

ஆசிரியர்: டாக்டர் எஸ். ராமகிருஷ்ணன்; பிரசுரம்: மீனாட்சிப் புத்தக நிலையம், 60, மேலக் கோபுரத் தெரு, மதுரை — 1; விலை: ரூ. 6.00. — லேசமாஸ்

---



அவன் (நண்பர்களிடம்): ஐயோ, எனக்கு வேலை நிறைய இருக்கு. வீட்டுக்குப் புறப்படட்டுமா?

அவர்கள்: என்ன வேலை அப்படி?

அவன்: எனக்கு எப்படித் தெரியும்? என் மனைவிக்குத்தான் தெரியும்!

- சம்பத் குமாரி

# அலைமீது தவழ்ந்துவரும் தென்றல் போலே
# ஓல்ட் ஸ்பைஸ் டால்க் மேனியின் மேலே

தாரணியெங்கும் தரத்திற்குப் பெயர்போனது ஓல்ட் ஸ்பைஸ்.
வீசும் தென்றலின் வாசம் அப்படியே உங்களை வசமாக்கும்.
நீலவானம், அலைவீசும் கடல், ஓல்ட் ஸ்பைஸ் தரும்
நறுமணம்—அந்தக் கொள்ளை இன்பத்திற்கு ஈடிணையேது?
எங்கு சென்றாலும் அந்த டால்க்கின் புத்துணர்ச்சி
எல்லோரையும் என்றும் வசீகரிக்கட்டும்.




ஓல்ட் ஸ்பைஸ்
ஆண்மையின் சின்னம்

Old Spice
the mark of a man

ஸ்பெஷல்
எகானமி
பாக்

ஆண்களின் அழகுக்காக ஓல்ட் ஸ்பைஸ் அளிக்கும் அணிவரிசை : ஆஃப்டர்-ஷேவ் லோஷன்*, கொலோன்*,
லாதர் ஷேவிங் க்ரீம்*, பிரஷ்லெஸ் ஷேவிங் க்ரீம், ஹேர் க்ரீம், பிரிலியண்டைன்.
*எலுமிச்சை மணத்திலும் கிடைக்கின்றன ☐ தயாரிப்பவர்கள் : கோல்ஃபாக்ஸ் லாபரட்டரீஸ் (இந்தியா)
பிரைவேட். லிட்., மெனலீஸ்-ஷில்டன் எண்டர்ப்ரைஸ்.

OS-4-TAM




**வாலிப - வயோதிக அன்பர்களே,**

வாலிப வயதில் செய்கிற தவறுதல்களே இப்போது உடல் கெட்டு பலவீனமடைந்து ரத்தக் குறைவு, சோர்வு, தலைவலி, உஷ்ணம், சோம்பல், கைகால் அசதி, பலவீனம், உடல்வலி, தூக்கக் குறைவு, ஆயாசம், களைப்பு, பீதி, வெட்கம், பயம், வெறுப்பு உண்டாகி மன வேதனையும் கஷ்டமும் அடைந்து வாழ்கிறார்கள். 77 வருட அனுபவம் பெற்ற நமது மருந்துகள் சாப்பிட்டுவர புத்துணர்ச்சி பெற்று நிம்மதியான வாழ்க்கை வாழலாம். வி. பி. பி.யில் பெற உடன் எழுதுக.

**ஒரு மாத மருந்துகள்**

**மிக உயர்தரம் செட் ரூ. 90. தங்க பஸ்பம், சிட்டுக்குருவி லேகியம் 60 வேளை – ரூ. 120 30 வேளை ரூ. 60.** போஸ்டேஜ் இலவசம். நேரில் ஆலோசனை பெற.

1ந் தேதி நெல்லை : நெல்லை லாட்ஜ், காலை 8 மணி முதல் 12 வரை
1ந் தேதி நாகர்கோவில் : ஸ்ரீ உடுப்பி கிருஷ்ண பவன், பிற்பகல் 2 மணி முதல் 4 மணி வரை
2ந் தேதி மதுரை : மணிஸ் கபே, காலை 8 மணி முதல் 2 மணி வரை
2ந் தேதி புதுக்கோட்டை : வஸந்தா லாட்ஜ், மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை
3ந் தேதி காரைக்குடி : A. V. M. P. L ரெஸ்ட் ஹவுஸ், காலை 9 மணி முதல் 11 மணி வரை
3ந் தேதி அறந்தாங்கி : பத்மா லாட்ஜ், பகல் 12 முதல் 1 மணி வரை
3ந் தேதி பட்டுக்கோட்டை : அசோகா லாட்ஜ், பிற்பகல் 2 மணி முதல் 3-30 மணி வரை
3ந் தேதி மன்னார்குடி : மன்னை லாட்ஜ், மாலை 4-30 முதல் 6 மணி வரை
4ந் தேதி திருச்சி : ஹோட்டல் அஜந்தா, காலை 8 முதல் 2 மணி வரை
4ந் தேதி கரூர் : பெரியார் லாட்ஜ், மாலை 4 மணி முதல் 5-30 வரை
5ந் தேதி தஞ்சாவூர் : ராஜா ரெஸ்ட் ஹவுஸ், காலை 10 மணி முதல் 12 மணி வரை
5ந் தேதி திருவாரூர் : அபூபக்கர் பில்டிங், மாலை 2 முதல் 4 மணி வரை
5ந் தேதி நாகப்பட்டினம் : தினகர் விலாஸ், மாலை 5 முதல் 6 மணி வரை
6ந் தேதி காரைக்கால் : அசோக் லாட்ஜ், காலை 8 முதல் 10 மணி வரை
6ந் தேதி கும்பகோணம் : தாஜ்மஹால் லாட்ஜ், பகல் 12 மணி முதல் 2 மணி வரை
6ந் தேதி மாயவரம் : காளியாகுடி லாட்ஜ், மாலை 3 மணி முதல் 4-30 மணி வரை
6ந் தேதி சிதம்பரம் : ஜெயராம் லாட்ஜ், மாலை 5-30 மணி முதல் 7 மணி வரை
7ந் தேதி பாண்டிச்சேரி : அருணா லாட்ஜ், காலை 8 மணி முதல் 9-30 மணி வரை
7ந் தேதி கடலூர் N. T. : ஹோட்டல் பிருந்தாவனம், காலை 10-30 மணி முதல் 12 மணி வரை

கிளை : **41, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை-1** போன் : **21448**

வைத்திய திலகம், வைத்தியராஜ் : **டாக்டர் எஸ். காளிமுத்து** R. M. P. (Ind.) V. V. C., A. M. I. H.

**பழனி சித்தர் வைத்தியசாலை (Regd.) பழனி-624 601**

போன் : 316, 316A, வீடு : 420. தியேட்டர் ஸ்ரீரங்கராஜா சமீபம் தந்தி : "சித்தர்"

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

## இருபத்தொன்பதாம் அத்தியாயம்
## தேசத் துரோகி

நதிக்கரைப் பாறையில் புலிகேசிக்கும் புத்த பிக்ஷுவுக்கும் நடந்த சம்பாஷணை மேலும் மேலும் குரோதம் நிறைந்ததாகிக் கொண்டு வந்தது.

சிவகாமியின் விஷயத்தில் நாகநந்திக்கு ஏற்பட்டிருந்த மதி மயக்கத்தைப் போக்கப் புலிகேசிச் சக்கரவர்த்தி முயன்றார். ஆனால், இது சம்பந்தமாகச் சக்கரவர்த்தி சொன்னதெல்லாம் நாக நந்தியின் குரோதத்தை இன்னும் அதிகமாக்கி வந்தது.

சிவகாமியைப் பற்றிப் புலிகேசி குறைவுபடுத்திப் பேசப் பேசப் புத்த பிக்ஷு ஆவேசத்துடன் அவளை உயர்த்திப் பேசலானார்.

சகோதரர்களுக்கிடையில் மேற்படி விவாதம் ரொம்பவும் காரமடைந்து அவர்கள் ஒருவரையொருவர் தாக்கிக் கொள்ளுவதற்கும் ஆயத்தமாகிவிட்ட சமயத்தில் அவர்கள் உட்கார்ந்திருந்த இடத்துக்குச் சிறிது தூரத்தில் நடந்த ஒரு கோரமான சம்பவம் அவர்களுடைய கவனத்தைக் கவர்ந்தது.

கேட்பவர்களின் இருதயம் நின்று போகும்படியான பயங்கரக் குரலில், ''ஐயோ! ஐயோ!'' என்று அலறிக் கொண்டு ஒரு மனிதன் ஓடி வந்து வாதோரா நதியின் செங்குத்தான கரையின் மீது ஒரு கண நேரம் நின்றான். மறுபடியும், ''ஐயோ!'' என்று அலறி விட்டு விரைந்தோடிய நதிப் பிரவாகத்தில் குதித்தான். குதித்தவுடனே தன்



ணீரில் மூழ்கினான். சில விநாடி நேரத்துக்கெல்லாம் அவன் குதித்த இடத்துக்குச் சற்றுத் தூரம் கிழக்கே அவனுடைய தலை மட்டும் மேலே எழுந்தது. பாறையே பிளந்து போகும்படியான ஒரு பயங்கரக் கூச்சல் கேட்டது. மறுபடியும் தண்ணீரில் மூழ்கியவன் அடியோடு மூழ்கியவன்தான். அவன் மூழ்கியதற்கு அடையாளம்கூட அங்கே காணப்படவில்லை.

மலை வீழ் நதியான வாதோரா சலசல சப்தத்துடன் விரைந்து பாய்ந்து கொண்டிருந்தது.

சில விநாடி நேரத்துக்குள் நடந்து முடிந்துவிட்ட மேற்படி சம்பவத்தைப் புலிகேசிச் சக்கரவர்த்தி கண்கொட்டாத பிரமிப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார். நதிப் பிரவாகத்தில் விழுந்த மனிதன் மேலே எழும்பி அலறிவிட்டு மறுபடியும் நீரில் மூழ்கியபோது புலிகேசியின் இருதயத்தை யாரோ இரும்புக் கிடுக்கியினால் இறுக்கிப் பிடித்தாற்போல் இருந்தது.



சற்று நேரம் அந்த மனிதன் மூழ்கிய இடத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டுப் புலிகேசி திரும்பி நாகநந்தியைப் பார்த்தார். பிக்ஷுவின் முகத்தில் அப்போது தோன்றிய புன்னகை புலிகேசியின் உடம்பைச் சிலிர்க்கச் செய்தது.

''அண்ணா! அந்தச் சைத்ரிகனை நீ என்ன செய்துவிட்டாய்?'' என்று புலிகேசி கேட்டதும், புத்தபிக்ஷு ஒரு பேய்ச் சிரிப்புச் சிரித்துவிட்டுச் சொன்னார்:

''அவனையா? நானா? வேறொன்றும் செய்யவில்லை! அப்பேர்ப்பட்ட அற்புதமான சித்திரத்தை வரைந்தவனுக்கு ஆசி கூறினேன். என்னுடைய ஆசியைப் பெறுவதற்காக அவன் தலையைக் குனிந்தபோது அவனுடைய பின் கழுத்தில் இந்தச் சுண்டு விரல் நகத்தி

னால் ஒரு கீறல் கீறினேன். இந்த நகத்தில் உள்ள விஷம் அவனுடைய உடம்பின் இரத்தத்தில் கலந்ததும் அவனுக்கு எரிச்சல் எடுத்திருக்கும். சற்று நேரத்துக்கெல்லாம் அவன் உடம்பு முழுவதும் அக்கினியினால் தகிக்கப்படுவது போல் இருந்திருக்கும். அவனுடைய மூளையும் கொதிப்படைந்திருக்கும் உடம்பையும் மூளையையும் குளிரச் செய்வதற்காகவே அப்படி விரைந்து ஓடி வந்து நதியில் குதித்தான். அவனுடைய உடம்பும் மூளையும் குளிர்ந்ததோடு உயிரும் குளிர்ந்து போய்விட்டது!''

''ஐயோ! அண்ணா! நீ எப்போது இத்தகைய கொடூர ராட்சஸன் ஆனாய்? கருணையே வடிவமான புத்த பகவானுடைய சங்கத்தில் சேர்ந்து காவி வஸ்திரம் அணிந்து கொண்டு இப்படிப்பட்ட கோர கிருத்தியங்களைச் செய்ய எப்படி உன் மனம் துணிகிறது?'' என்று புலிகேசி கேட்டார்.

நாகநந்தி புலிகேசியை உற்று நோக்கிச் சிறநுடன் கூறினார்:

''ஓஹோ! நான் கருணையற்ற ராட்சஸன் என்பது இப்போதுதான் தெரிகிறதோ? உனக்காகவும் உன் இராஜ்யத்துக்காகவும் இதைவிட ஆயிரம் மடங்கு கோர கிருத்தியங்களை நான் செய்யவில்லையா? அப்போதெல்லாம் நீ ஏன் எனக்குத் தர்மோபதேசம் செய்ய முன்வரவில்லை? காஞ்சி நகரத்துக் குடி தண்ணீரில் விஷத்தைக் கலந்து அந்நகர மக்களையெல்லாம் கொன்றுவிடுவதாக நான் சொன்னபோது நீ சந்தோஷத்துடன் சம்மதித்ததை மறந்துவிட்டாயா?''

''ஆம், ஆம்! அதையெல்லாம் நான் மறக்கவில்லை. ஆனால் அது ஒரு காலம்!'' என்று கூறிப் புலிகேசி சக்கரவர்த்தி





"சம்பாதிக்கும் பெண்ணைத்தான் கல்யாணம் செய்துகொள்வேன் என்று ரொம்ப நாளாக ஒத்திப் போட்டுக்கொண்டே வந்தானே சோமு, கடைசியில் அப்படியே கல்யாணம் செய்துகொண்டு விட்டானாமே?"

"ஆமாம், பெண்ணுக்கு மாதம் முப்பது ரூபாய் பென்ஷன் வருகிறது!"

---

பெருமூச்சு விட்டார். சற்று நேரம் நதியின் பிரவாகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு நாகநந்தியின் முகத்தை ஏறிட்டு நோக்கினார். "அண்ணா! நீ எனக்குச் செய்த உதவிகளையெல்லாம் நான் மறந்துவிடவில்லை. இந்த உயிர் உன்னுடையது. இராஜ்யம் உன்னுடையது. நீ எனக்குச் செய்திருக்கும் உதவிகளுக்கெல்லாம் இத்தனை காலமும் நான் பிரதியொன்றும் செய்யவில்லை. இப்போது செய்ய உத்தேசித்திருக்கிறேன். வாதாபி சிம்மாசனத்தில் வீற்றிருந்து சாம்ராஜ்யம் ஆளும் சுகத்தை முப்பத்தைந்து வருஷ காலம்



நான் அநுபவித்துவிட்டேன். எனக்குப் போதும் போதும் என்று ஆகிவிட்டது. சாம்ராஜ்யத்தின் பொறுப்பையும் சிம்மாசனத்தின் சுகத்தையும் இனிமேல் நீ ஏற்றுக் கொள். இத்தனை காலமும் நீ அணிந்திருந்த காவி வஸ்திரத்தை நான் அணிந்து கொண்டு இந்த அஜந்தா சங்காராமத்திலேயே மீதியுள்ள என் வாழ்நாளைக் கழித்துவிடுகிறேன். பிரகிருதி தேவியும் கலைத் தேவியும் பூரண சௌந்தரியத்துடன் கொலு வீற்றிருக்கும் இந்த அஜந்தா மலையில் நீ உன்னுடைய இளம் பிராயத்தைக் கழித்தாய். நான் என்னுடைய முதுமைப் பிராயத்தை இவ்விடத்தில் கழிக்கிறேன். சாம்ராஜ்ய பாரத்தை இனி மேல் நீ ஏற்றுக் கொண்டு நடத்து.

இவ்விதம் புலிகேசிச் சக்கரவர்த்தி சொல்லி வந்தபோது, அவருடைய வார்த்தை ஒவ்வொன்றும் உண்மையான உள்ளத்திலிருந்து வருவது என்பதைப் புத்தபிக்ஷு தெரிந்து கொண்டார். இத்தனை நேரமும் குரோதம் கொதித்துக் கொண்டிருந்த அவருடைய முகம் இப்போது மலர்ந்தது. புலிகேசி பேச்சை இடையில் நிறுத்தி மௌனமாயிருந்த சிறிது நேரத்தில் பிக்ஷுவின் உள்ளம் வருங் காலத்தைப் பற்றிய எத்தனையோ இன்பக் கனவுகளைக் கண்டது; அந்தக் கனவுகளின் அறிகுறி ஒருவாறு அவருடைய முகத்திலே காணப்பட்டது.

"அண்ணா! என்ன சொல்லுகிறாய்? உனக்குச் சம்மதம்தானே?" என்று புலிகேசி கேட்டபோது அவருடைய வார்த்தையில் புத்த பிக்ஷுவுக்குப் பூரண நம்பிக்கை ஏற்பட்டிருந்த போதிலும் இன்னும் நன்றாக உறுதிப் படுத்திக்கொள்ளும்பொருட்டு, "தம்பி! இப்போது நீ சொன்ன வார்த்தையெல்லாம் உண்மையா? அல்லது காவி வஸ்திரம் தரித்த பிக்ஷுதானே என்று என்னைப் பரிகாசம் செய்கிறாயா?" என்று கேட்டார்.

"அண்ணா! நம் பாட்டனார் சத்யாச்ரயப் புலிகேசியின் திருநாமத்தின் மீது ஆணை வைத்துச் சொல்கிறேன்: நான் கூறியதெல்லாம் உண்மை. இதோ இந்தக் கணமே அதை மெய்ப்பிக்கச் சித்தமாயிருக்கிறேன். இன்றைக்கே நான் பிக்ஷு விரதம் மேற்கொள்ளுகிறேன். ஆசாரிய பிக்ஷுவிடம் சொல்லி உனக்கும் விரதத்திலிருந்து விடுதலை வாங்கித் தருகிறேன். ஆனால், இதற்கெல்லாம் ஒரே ஒரு நிபந்தனை மட்டும் இருக்கிறது. அந்தக் காஞ்சி நகரத்து நாட்டியப் பெண்ணை நீ தியாகம் செய்து விடவேண்டும்."

பெண் புலியின் மீது வேலை எறிந்து கொன்ற வேடனை ஆண் புலி எப்படிப் பார்க்குமோ அப்படி நாகநந்தி புலிகேசியைப் பார்த்தார்!

'நடனப் பெண்ணின் சரணாகதி' சித்திரத்தை எழுதிய கலைஞனுக்கு என்ன கதி நேர்ந்ததோ அதே கதி ஒருவேளை புலிகேசிக்கும் நேர்ந்திருக்கக் கூடும். ஆனால், அச்சமயம் வாதோரா நதியின் மறு கரை வழியாக ஏழெட்டுப் பேர் மிக விரைவாக வந்து கொண்டிருந்தது தெரிந்தது. அந்த ஏழெட்டுப் பேரும் சாமான்ய மனிதர்கள் அல்ல;

மந்திரிகள், தளபதிகள் முதலியோர். ஏதோ முக்கியமான, அவசரமான விஷயத்தைச் சக்கரவர்த்தியிடம் தெரிவிப்பதற்கு அவரைத் தேடி வருவதாகவும் தோன்றியது.

இதைக் கவனித்த பிக்ஷு தம் உள்ளத்தில் பொங்கி வந்த குரோதத்தை ஒருவாறு அடக்கிக் கொண்டு, "ஆ! உன்னுடைய சாம்ராஜ்ய தானத்தில் ஏதோ ஓர் இழிவான சூழ்ச்சி இருக்கிறது என்று சந்தேகித்தேன். அது உண்மையாயிற்று!" என்றார்.

"அண்ணா! நன்றாக யோசித்துச் சொல்லு! சத்யாச்ரயப் புலிகேசி வீற்றிருந்த சளுக்க குலத்துச் சிம்மாதனத்தில் ஒரு சிற்பியின் மகள் ஏறலாமா? அதற்கு ஒருநாளும் நான் சம்மதிக்க முடியாது. உனக்கும் எனக்கும் மன வேற்றுமை உண்டுபண்ணிய அந்த மோகினிப் பிசாசைத் துரத்திவிடு! துரத்திவிட்டு வாதாபி சிம்மாசனத்தில் ஏறி ஆயுள் உள்ளவரையில் இராஜ்ய பாரத்தை நடத்து" என்று புலிகேசி உருக்கமான குரலில் கூறினார்.

நாகநந்தியோ பழையபடி நாக சர்ப்பத்தைப் போல் சீறிக்கொண்டு "சண்டாளா! பாதகா! நீ நாசமடைவாய்! உன் தலைநகரம் எரிந்து சாம்பராகும்! உன் சாம்ராஜ்யம் சின்ன பின்னமாகி அழியும்! தேவேந்திரனுடைய பதவி கிடைப்பதாயிருந்தாலும் சிவகாமியை என்னால் தியாகம் செய்ய முடியாது. கேவலம் இந்தச் சளுக்க இராஜ்யத்துக்காகவா அவளைத் தியாகம் செய்யச் சொல்கிறாய்? ஒருநாளும் இல்லை! இப்படி நன்றி கெட்ட வஞ்சகத்துடன் என்னிடம் நடந்து கொண்டதற்குக் கூடிய சீக்கிரம் நீ பலன் அநுபவிக்கப் போகிறாய்! உனக்கும் எனக்கும் இந்த விநாடியோடு எல்லா விதப் பந்தமும் அற்று விட்டது. இனி உன் முகத்திலேயே நான் விழிப்பதில்லை. இதோ நான் போகிறேன். போய்ச் சிவகாமியையும் அழைத்துக் கொண்டு உன் ராஜ்யத்தை விட்டே போய் விடுகிறேன். அதோ வருகிறார்கள் பார், அவர்கள் உன்னுடைய விநாசச் செய்தியைக் கொண்டு வருகிறார்கள்!" என்று கூறினார்.

இப்படி நெருப்பைக் கக்கும் வார்த்தைகளை நாகநந்தி கூறிக் கொண்டிருக்கும்போது நதியின் மறு கரையோடு விரைந்து வந்தவர்கள் மேற்கே சற்றுத் தூரத்திலிருந்த மூங்கில் மரப் பாலத்தின் வழியாக நதியைக் கடந்து சக்கரவர்த்தியும் பிக்ஷுவும் இருந்த பாறையை அணுகினார்கள்.

நாகநந்தி தமது சொல்லைக் காரியத்தில் நடத்தி வைக்கும் பொருட்டு இரண்டு அடி எடுத்து வைத்தவர், புனராலோசனை செய்து தமது எண்ணத்தை மாற்றிக் கொண்டவர் போலத் தயங்கி நின்றார். வருகிறவர்கள் என்ன செய்தி கொண்டு வருகிறார்கள் என நிச்சயமாகத் தெரிந்து கொள்ளும் பொருட்டு அவர் அவ்விதம் நின்றார் போலும்.

வந்தவர்கள் எல்லோர் முகத்திலும் கவலையும் பீதியும் குடி கொண்டிருப்பதைப் பார்த்த சக்கரவர்த்தி மிக்க வியப்படைந்து, "எல்லோரும் கும்பலாக வந்திருக்கிறீர்களே? என்ன விசேஷம்? ஏதாவது முக்கியமான செய்தி உண்டா?" என்று கேட்டார்.

"ஆம், பிரபு! மிகவும் முக்கியமான செய்திதான். ஆனால், நம்பவே முடியாத செய்தி. சொல்வதற்கும் தயக்கமாயிருக்கிறது!" என்று சளுக்க சாம்ராஜ்யத்தின் பிரதம மந்திரி கூறினார்.

"அதென்ன அவ்வளவு முக்கியமான செய்தி? எங்கிருந்து யார் கொண்டுவந்தார்கள்? ஏன் எல்லோரும் இப்படிப் பயந்து சாகிறீர்கள்? யாராவது பகைவர்கள் சளுக்க சாம்ராஜ்யத்தின் மீது படையெடுத்து வருகிறார்களா? சீக்கிரம் சொல்லுங்கள்!"

"மகாப் பிரபு! தாங்களே சொல்லி விட்டீர்கள்!"

"இது என்ன பிதற்றல்? நான் என்ன சொன்னேன்?"

"பகைவர்கள் சளுக்க ராஜ்யத்தின் மீது படையெடுத்து வருவதாகச் சொன்னீர்கள்."

"அதுவா உண்மை?"

"ஆம், சக்கரவர்த்தி!"

"அதிசயமான செய்திதான். யார் அந்தச் சத்துரு? வடக்கே, ஹர்ஷரா யிருக்க முடியாது. அவரிடமிருந்து சமீபத்திலே சிநேகம் நிறைந்த அழைப்புக் கடிதம் வந்திருக்கிறது. மற்றபடி மேற்கேயும் கிழக்கேயும் சத்துருக்கள் இல்லை. வந்தால், தெற்கேயிருந்துதான் வர வேண்டும். யார், காஞ்சி மாமல்லன் படையெடுத்து வருகிறானா?"

"அப்படித்தான் தகவல் பிரபு!"

"ஒருநாளும் நான் நம்ப மாட்டேன். அப்படியே இருந்தாலும் எதற்காக நீங்கள் இப்படிக் கலக்கமடைந்திருக்கிறீர்கள்? என்ன முழுகிப் போய் விட்டது?"

---

'மாலா! நான் உன்னை உயிருக்குயிராகக் காதலிக்கிறேன்; என் கனவில்கூட நீதான் வருகிறாய். வாழ்க்கை முழுதுமே உன்னுடன் பிரயாணம் செய்ய நான் துடிக்கிறேன்.''

"சரி ராஜ்! நம் கல்யாணம் எப்போது?"

"சே, பேச்சை மாற்றாதே!"





அவள் : "ரமேஷ்! நீங்கள் காதலிக்கும் முதல் பெண் நான்தானா?"
அவன் : "இதென்ன அதிசயமாயிருக்கிறது? ஆஷா, நேகா, லதா, சரோஜா, லீலா எல்லாரும்கூட இதே கேள்வியைத்தான் என்னிடம் கேட்டார்கள்!"

---

"பெருமானே! நம்முடைய சைனியத்தில் பெரும் பகுதி நர்மதைக் கரையில் இருக்கிறது. இன்னொரு பெரும் பகுதி வேங்கியில் இருக்கிறது" என்று பிரதம மந்திரி தயக்கத்துடன் கூறினார்.

"அதனால் என்ன? மாமல்லன் காஞ்சியிலிருந்து வருவதற்குள் நம்முடைய சைனியங்களை வாதாபிக்குக் கொண்டு வர முடியாதா?"

"மாமல்லன் காஞ்சியில் இல்லை பிரபு! பல்லவ சைனியம் வட பெண்ணையைக் கடந்து ஒரு வாரம் ஆகிறது. இப்போது துங்கபத்திரையை நெருங்கியிருக்க வேண்டும்."

"இது என்ன விந்தை? செய்தி யார் கொண்டு வந்தது?"

"இதோ இவர்கள் வாதாபியிலிருந்து கொண்டு வந்திருக்கிறார்கள். இரவு



பகல் என்று தங்காமல் விரைந்து வந்திருக்கிறார்கள்!" என்று பிரதம மந்திரி சொல்லி இரு தூதுவர்களை முன்னால் நிறுத்தினார்.

"உங்களை யார் அனுப்பினார்கள்? ஓலை ஏதாவது கொண்டு வந்திருக்கிறீர்களா?" என்று புலிகேசி திகைப்புடன் கேட்டார்.

"இல்லை, பெருமானே! ஓலை எழுதுவதற்குக் கூட நேரமில்லை. வாதாபிக் கோட்டைத் தலைவர் வாய்மொழியாகச் செய்தி சொல்லி அனுப்பினார். நாங்கள் ஆறு பேர் ஐந்து நாளைக்கு முன்பு கிளம்பினோம். வழியில் நாலு பேர் விழுந்து விட்டார்கள். இரண்டு பேர்தான் மிஞ்சி வந்து சேர்ந்தோம்."

"மந்திரி! இவர்கள் பேச்சு உண்மையாயிருக்க முடியுமா? மாமல்லன் இலங்கைப் படையெடுப்புக்காகக் கப்பல் கட்டிக் கொண்டிருப்பதாகவல்லவா நாம் கேள்விப்பட்டோம்?"

"ஆம், பிரபு! நம்புவதற்குக் கஷ்டமாகத்தான் இருக்கிறது. ஆயினும் இவர்கள் வாதாபிக் கோட்டைத் தலைவரின் இலச்சினை கொண்டு வந்திருக்கிறார்கள். இவர்களுக்குப் பின்னால் விவரமான ஓலையோடு வேறு தூதுவர்களும் வருவார்களாம். இவர்கள் சொல்வது உண்மையாயிருந்தால், பல்லவ சைனியம் இப்போது துங்கபத்திரையைக் கடந்திருக்க வேண்டும். துங்கபத்திரைக் கரையிலிருந்த சைனியத்தை அந்தப் பிரதேசத்தில் பஞ்சம் என்று கொஞ்ச நாளைக்கு முன்புதான் வேங்கிக்கு அனுப்பினோம்."

புலிகேசி சற்று நேரம் ஸ்தம்பித்து நின்றார். சட்டென்று அவர் மனத்தில் ஏதோ ஓர் உண்மை உதயமாகியிருக்க வேண்டும். சற்றுத் தூரத்தில் நின்று மேற்படி சம்பாஷணையையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த நாகநந்தியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார்.

மறுபடியும் பிரதம மந்திரியை நோக்கி, "மந்திரி! நமது ஒற்றர் படை என்ன செய்து கொண்டிருந்தது? மாமல்லன் படையெடுப்பைக் குறித்த செய்தி நமக்கு ஏன் முன்னாலேயே வரவில்லை? காஞ்சியிலிருந்து பல்லவ சைனியம் புறப்பட்ட செய்தி கூட நமக்கு ஏன் வாதாபியிலிருக்கும்போதே கிடைக்கவில்லை?" என்றார்.

பிரதம மந்திரி வணக்கத்துடன், "பிரபு! ஒரு வருஷத்துக்கு முன்னால் நம் ஒற்றர் படைத் தலைவர் வேலையிலிருந்து நீக்கப்பட்டார். அவர் வகித்த பொறுப்பை நமது பிக்ஷு ஏற்றுக் கொண்டார். அடிகளைத்தான் கேட்க வேண்டும்!" என்றார்.

சக்கரவர்த்தி உள்பட அங்கிருந்த அனைவருடைய கண்களும் அப்போது பிக்ஷுவை நோக்கின.

புலிகேசி, "அடிகளே! மாமல்லனுடைய படையெடுப்புச் செய்தி தங்களுக்கு முன்னாலே தெரியுமா? வேண்டுமென்று என்னிடம் சொல்லாமல் மறைத்து வைத்திருந்தீர்களா?" என்று கேட்டார்.

"தம்பி! உன் கேள்விக்கு இவர்கள் எல்லோருடைய முன்னிலையிலும் நான் மறுமொழி சொல்ல வேண்டுமா?" என்றார் பிக்ஷு.

''அடிகளே! சற்று முன்னால் சொன்னதை மறந்து விட்டீர்களா? தங்களுக்கும் எனக்கும் இனி யாதோர் உறவும் இல்லையென்று சொல்லவில்லையா? இப்போது என்னத்துக்காக உறவு கொண்டாட வேண்டும்? உண்மையை உடனே சொல்லுங்கள்!''

'' அப்படியானால் சொல்லுகிறேன். மாமல்லன் படையெடுப்புச் செய்தி எனக்கு முன்னமே தெரியும். நன்றியில்லாத பாதகனாகிய உனக்குத் தண்டனை கிடைக்கும் பொருட்டே உன்னிடம் சொல்லவில்லை!'' என்று நாகநந்தி கர்ஜித்தார்.

''இந்தத் தேசத் துரோகியைப் பிடித்துக் கட்டுங்கள்!'' என்று சக்கரவர்த்தி கட்டளையிட்டதும், அங்கு நின்ற எட்டுப் பேரும் பிக்ஷுவைச் சூழ்ந்து கொண்டார்கள்.

பிக்ஷு, மடியில் செருகியிருந்த வளைந்த சிறு கத்தியைப் பளிச்சென்று எடுத்துக் கொண்டு, ''ஜாக்கிரதை! அருகில் நெருங்கியவன் உடனே யமலோகம் போவான்!'' என்றார்.

எட்டுப் பேரும் தம் தம் உடைவாட்களை உறையிலிருந்து விரைவாக எடுத்துக் கொண்டார்கள்.

''அப்படிச் செய்யுங்கள்! சூர சிகாமணிகள் எட்டுப் பேர் சேர்ந்து ஒரு பிக்ஷுவைக் கத்தியால் வெட்டிக் கொல்லுங்கள். புலிகேசிச் சக்கரவர்த்தியின் பெருமை உலகமெல்லாம் பரவும். மாமல்லன் கூடப் பிரமித்துத் திரும்பிப் போய்விடுவான்!'' என்று பிக்ஷு பரிகாசக் குரலில் கூறினார்.

அதைக் கேட்ட புலிகேசி, ''நில்லுங்கள்! இந்த நீசத் துரோகியைக் கொன்று உங்கள் கத்தியை மாசுபடுத்திக் கொள்ள வேண்டாம்! விலகுங்கள்!'' என்று கூறினார்.

அவ்விதமே எட்டுப் பேரும் விலகிக் கொண்டார்கள். எனினும், சக்கரவர்த்தியின் பேரில் பிக்ஷு பாய்ந்து விடக் கூடும் என்று எண்ணி ஜாக்கிரதையாகவே நின்றார்கள்.

பிக்ஷுவைப் பார்த்துப் புலிகேசிச் சக்கரவர்த்தி கூறினார்: ''அடிகளே! உம்முடைய உயிரை வாங்குவது தவறு. உம்மை நம்பிய சகோதரனுக்கும் உமது நாட்டுக்கும் நீர் செய்த மகா துரோகத்துக்கும் அது தக்க தண்டனையாகாது. நீண்ட காலம் நீர் உயிர் வாழ்ந்து உம்முடைய பாபத்துக்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும்... உம்முடைய துரோகத்தை நினைத்து நினைத்துக் கண்ணீர் விட வேண்டும். மனித உருக் கொண்ட துஷ்டப் பைசாசமே! போ! வாதாபிக்குச் சென்று உன்னுடைய மோகினியையும் அழைத்துக் கொண்டு போ! உன் வாக்கை இந்த விஷயத்திலாவது நிறைவேற்று! இனி என் உயிர் உள்ளவரையில் என் முகத்தில் விழிக்க வேண்டாம்! ஒரு பெண்ணின் மோகத்துக்காக ஒரு ராஜ்யத்தையே விற்கத் துணிந்த நீசனே, போ! நெடுங்காலம் உயிரோடிருந்து உன்னுடைய துரோகத்தை நினைத்து அழுது கொண்டிரு!''

ஆத்திரம் ததும்பிய குரலில் விம்மலோடு கலந்து புலிகேசி கூறிய மேற்படி கடு மொழிகளைக் கேட்டுக் கொண்டு நாகநந்தி கற்சிலையைப் போல் நின்றார். புலிகேசி நிறுத்தியதும் ஒரு வார்த்தையும் மறுமொழி கூறாமல் நதிக் கரையோடு கிழக்கு நோக்கி நடக்கத் தொடங்கினார்.

**பி**க்ஷு போகும் திசையை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த புலிகேசி அவர் மறைந்ததும் சட்டென்று திரும்பித் தம் கண்களில் ததும்பிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டார். பிறகு, அங்கு நின்றவர்களைப் பார்த்து, ''மந்திரி! சேனாதிபதி! இந்தத் தூதர்கள் கொண்டு வந்த செய்தி உண்மையாகத்தான் இருக்க வேண்டும். இதில் சந்தேகம் வேண்டாம். புத்த பிக்ஷுவின் விஷயத்தில் நீங்கள் எல்லோரும் செய்த எச்சரிக்கையை நான் அலட்சியம் செய்து விட்டேன். அதன் பலனை நானும் நீங்களும் அனுபவிக்கப் போகிறோம். என்றாலும், மோசம் ஒன்றும் போய் விடவில்லை. புலியின் வாய்க்குள்ளே வேண்டுமென்று தலையை விடுவது விளையாட்டான காரியம் அல்ல என்பதை மாமல்லனுக்குக் கற்பிப்போம். துங்கபத்திரையைக் கடந்து வந்த பல்லவ வீரன் ஒருவனாவது திரும்பிப் போகாமல் ஹதா ஹதம் செய்வோம். என்னுடைய தென்னாட்டுப் படையெடுப்பு பூரண வெற்றியடையவில்லை என்ற குறை என் மனத்தில் இத்தனை நாளும் இருந்து வந்தது. அந்த மனக் குறை இப்போது தீர்ந்துவிடப் போகிறது. பல்லவ நாடு சளுக்க சாம்ராஜ்யத்தோடு சேர்ந்து ஒன்றாகி விடப் போகிறது!'' என்றார். (தொடரும்)

---

''சார், உங்கள் பெண் என்னைத்தான் விரும்பிக் கல்யாணம் செய்துகொள்வேனென்று பிடிவாதமாக இருக்கிறாள்!'' என்றான் புதிய இளைஞன்.

''உன்னை யார் என் வீட்டுப் பக்கம் சதா அலையச் சொன்னது? உனக்குக் கொஞ்சமாவது அறிவு இருக்கிறதா? உனக்கு நன்றாக வேண்டும்!''

- கே. வி. எம்.



# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
''பாலுஸேரி பில்டிங்ஸ்'', 3, சிங்கராச்சாரி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.
தந்தி: 'EVERMANS', போன்: 85834, தபால்பெட்டி: 414

### நீண்டகாலச் சீட்டுகள்

50 மாதங்கள் — 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/- |

40 மாதங்கள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

### குறுகியகாலச் சீட்டுகள்

20 மாதங்கள் — 20 அங்கத்தினர்கள்

மாதம் ரூ. 30/- முதல் ரூ. 500/- வரை சந்தா

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |

சேரும் குரூப்பை விவரித்து எழுதவும்
கிளைகள்: புது டில்லி - பம்பாய் - பெங்களூர் - கல்கத்தா - கோயமுத்தூர்

ஸ்தாபிதம்: 1947

29 YEARS

எங்கள் சேவை உங்களுக்குத்தேவை

# அபூர்வராகங்கள்

ஒரு வாலிபன்—அவன் காதலிப்பது தன்னை விட மூத்தவளை ; ஒரு பருவப் பெண், அவள் காதலிப்பது தன்னைவிட வயதில் ரொம்ப ரொம்ப மூத்தவரை. அவர் அவளை ஏற்கத் தயங்குகிறார் — அதே மாதிரி — வயதில் மூத்தவள் வாலிபனின் காதலை ஏற்கத் தயங்குகிறாள் — விதி அவர்களை ஒன்றுசேர்த்து வைத்ததா ? அது எப்படி என்பதுதான் கதை. எந்த ஓர் இடத்திலும் சிறிதும் விரசம் தட்டாமல் அபூர்வ ரா்தங்களை இழையவிட்டிருக்கும் பாலசந்தர், சுவையான வசனங்களை அளவாகப் போட்டு, தம் டைரக்ஷன் திறமையினால் மேலும் சுவையைக் கூட்டியிருக்கிறார்.

திரைக்கதை புதுமையானது என்பதில் ஐயமில்லை. பாத்திரப் படைப்பிலும் தாராளமாகப் புதுமையைக் கையாண்டிருக்கிறார். படத்தின் குழப்பமில்லாத விறுவிறுப்பு பாராட்டுக்குரியது.

வாலிபன் பிரசன்னாவாகக் கமலஹாஸனை விடத் தகுந்த நடிகர் யாரும் கிடைத்திருக்க மாட்டார். இளமைக்கே உரிய முரட்டுத் தனம், பொறுப்பற்ற தன்மை ஆகிய இரண்டையும் நன்றாக வெளிப்படுத்துகிறார். அன்பு என்றால் என்ன என்று அறிந்திராத அவ்வாலிபன் அந்தப் பாடகியின் அரவணைப்பில், ஆதரவில், பேச்சில் — அவ்வளின் முழு உருவத்தையும் கண்டு நெகிழ்ந்து போகிறான். கமலஹாஸனின் நடிப்பைக் கண்டு நாம் நெகிழ்ந்து போகிறோம். இசையரசியாக வந்து 'அபூர்வ ராகங்க'ளுக்குப் புதிய சங்கதிகளைச் சேர்ப்பவர் ஸ்ரீவித்யா. மிக இயல்பான நடிப்பு. நல்ல 'செலக்ஷன்' !

அநாதைப் பெண்ணாக வந்து, ''அபூர்வ ராகங்க''ளில் அமைந்த சாகித்தியங்களின் ஸ்வரப் பிரஸ்தார விந்நியாசங்களுக்கு ஆதாரமாக இருப்பவர் ஜெயசுதா. குழந்தைத்தனத்தோடு ஸீரியஸ்ஸாகவும் நடித்து நல்ல பெயரைத் தட்டிக் கொள்கிறார். மேஜர் சுந்தரராஜனுக்குச் சற்றுப் புதுமையான அப்பா வேஷம் ! இறந்துபோன மனைவியின் புனித நினைவோடும், வீட்டைவிட்டு ஓடிவிட்ட மகளைப் பற்றிய வேதனையோடும் காலம் தள்ளி வரும்போது திடீரென்று ஒரு புதுத் திருப்பம்? பாத்திரத்துக்கு ஏற்ற நடிப்பைக் காண முடிகிறது. 'டாக்டர்' நாகேஷின் இரட்டை வேஷம் படத்தின் சிறப்பான தமாஷ் பகுதி.

கவியரசு கண்ணதாசனின் பாடல்கள் ''அபூர்வ ராகங்க''ளுக்கு அமைந்துவிட்ட தனியானதொரு சிறப்பு அம்சம் ! ஜேசுதாஸ் பாடும் ''அதிசய ராகம்'' என்ற ஆரம்பப் பாடலே களைகட்டி விடுகிறது!

''என்னுடைய அப்பா யாருக்கு மாமனாரோ அவருடைய மகனுடைய அப்பா என் மகளுக்கு மாமனாரானால் எனக்கும் அவருக்கும் என்ன உறவு ?'' இந்தப் பழங்காலத்துப் புதிர்தான் திரைக் கதையின் கரு; படத்தின் சுவையான அம்சம். இடக்கு முடக்கான தாளம்தான் என்றாலும் லயம் பிசகவில்லை, ஓரிடத்திலும் ! சபாஷ் !

கே. பாலசந்தரின் ''அபூர்வ ராகங்கள்''— சுருதி சுத்தமாக ஒலிக்கின்றன. — காந்தன்



கண்ணன் தன் திருவாயில் பாஞ்ச ஜன்யம் என்னும் சங்கை வைத்து ஊதுபவன். கரிய திருமேனியை உடைய அந்தப் பெருமானுடைய திருவாய் பவளம் போல் சிவப்பாக இருக்கிறது. அவனுடைய திருவாயில் அமர்ந்திருக்கும் சங்கு நல்ல வெண்மை நிறமுடையது. நீலமேனிப் பரப்பினிடையே திருவாய்ச் சிவப்புக்கருகில் அந்த வெள்ளை நிறம் எடுத்துக் காட்டுகிறது.

அந்தச் சங்குக்குக் கிடைத்த பாக்கியம் தான் எவ்வளவு சிறந்தது! எங்கோ ஆழமாக உள்ள கடலின் கீழே கிடந்த அது, இப்போது எவ்வளவு உயர்ந்த இடத்தைப் பெற்று விளங்குகிறது.

அதைப் பார்க்கிறாள் கோதை. அவளுக்குச் சற்றே பொறாமை எழுகிறது. கண்ணபிரான் செவ்விதழின் மேல் இருந்து அதன் எழிலையும் மணத்தையும் சுவையையும் நுகரும் பெரும் பேறு எங்கேயோ கிடந்த வெண் சங்குக்கு அல்லவா கிடைத்துவிட்டது? அவளுடைய காதல் உணர்ச்சி கரை புரண்டு எழுகிறது. அந்த வெண் சங்கோடு பேசத் தொடங்குகிறாள்.



# கோதையின் காதல்

''மிகவும் ஆழமான கடலிலிருந்து ஏற்றம் பெற்று வந்திருக்கின்ற வெண்சங்கே! நான் ஒன்று கேட்கிறேன், சொல்'' என்கிறாள்.

**சொல், ஆழி வெண்சங்கே!**

கேட்க வேண்டும் என்று தொடங்கியவளுக்கு நாணம் எழுகிறது. எதைக் கேட்பது? ''சங்கே! எம்பெருமானுடைய திருவாய் கருப்பூர வாசம் வீசுமோ?'' என்று தொடங்குகிறாள்.

**கருப்பூரம் நாறுமோ?**

கண்ணபிரான் பச்சைக் கருப்பூரம் கலந்த தாம்பூலம் தரித்தவன்; ஆகையால் அவன் திருவாய் அந்தக் கருப்பூர மணம் வீசும். ஆகவே அதைக் கேட்டாள். பிறகு ஓர் எண்ணம் வந்தது. 'பச்சைக் கருப்பூர வாசனை அருகிலே நின்றருக்கும் புலப்படுமே! இதைப்

(கண்ணனிடம் காதல் கொள்ளாதவர் யார்? கோதையும் ராதையும் கோகுலத்துக் கோபியரும் ஞானியரும் யோகியரும் ஆவினங்களும் மரம் செடி கொடிகளும்கூடக் கண்ணன் குழலமுதைக் கேட்டு இரங்குகின்றன. அவனிடம் முழுமையாக மனத்தைப் பறிகொடுத்து விடுகின்றன. ஸ்ரீ ஜயந்தியை யொட்டி வெளியாகும் இந்தச் சிறப்பிதழுக்குச் சிரமாகக் கோதையின் காதலை ஒரே ஒரு கவிதையைக் காட்டி வர்ணிக்கிறார் திரு கி. வா. ஜகந்நாதன். மேலட்டை வண்ணப் படம்: ஏ. ஆர். வி. பத்தா.)

போய், நெருங்கிப் பழகும் சங்கிடம் போய்க் கேட்க வேண்டுமா? அரண்மனையில் உள்ளே புகுந்து பழகும் ஒருத்தியிடம் அரண்மனை வாசலைப் பற்றியா கேட்பார்கள்? அவளிடம் இன்னும் நுட்பமானதை, இரகசியமானதை, அல்லவா கேட்க வேண்டும்? வேறு பலரும் அறியும் கருப்பூர மணம் செயற்கை மணந்தானே? அதைத் தெரிந்து கொள்ளுவதற்குச் சங்கினிடமா போக வேண்டும்?'

அவள் கேட்க விரும்பும் இரகசியம் வேறு ஒன்று இருக்கிறது. அதைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற விருப்பம் மிகுதியாக இருக்கிறது. ஆனால் பெண் ஆகையால் உடனே அதைக் கேட்க நாணுகிறாள், 'கருப்பூரம் நாறுமோ?' என்றாள்; 'கமலப் பூ நாறுமோ?' என்றாள்.

அவள் கண்ணனிடம் ஆராக் காதல் கொண்டவள். அவனுக்கு அருகில் செல்பவர்கள் அவன் திருவாயின் கருப்பூர மணத்தை அறிந்து கொள்ள முடியும். அது அவ்வளவு பெரிய இரகசியம் அன்று. அவனைக் குழந்தைப் பருவத்தில் கொஞ்சி முத்தமிட்ட




கண்ணனுடைய வாய்க்கு இயற்கையாகவே ஒரு மணம் இருக்குமே! அதை எல்லோரும் அறிந்துகொள்ள முடியாதே! அந்த நுட்பத்தை அல்லவா கேட்க வேண்டும்? இந்த எண்ணம் எழவே அடுத்தபடி கேட்கிறாள் :

கமலப்பூ நாறுமோ?

கண்ணபிரானுடைய திருவாய் இயல்பாகவே கமலப் பூவின் மென் மணம் உடையது. அதைத் தெரிந்துகொள்ள ஆசைப்படுபவளைப் போல் இப்படிக் கேட்டாள். ஆனால் கோதையினுடைய அந்தரங்கத்தில் வர்களுக்கு அவன் திருவாயின் இயல்பான கமலப் பூவின் மணமும் தெரிந்திருக்கும். அதுவும் மிகவும் நுட்பமான இரகசியம் அல்ல. ஆனால் அவனிடம் காதல் கொள்பவர்கள் விரும்புவது என்ன? அவனுடைய இதழூறலை வேண்டித் தவிக்கிறவர்கள் அவர்கள். அவனுடைய செவ்விதழின் இன்சுவையை நுகர வேண்டும் என்ற மீதூர்ந்த உணர்ச்சி உள்ளவர்கள். கோதைப் பிராட்டியின் உள்ளமும் அதையே விழைந்து நிற்கிறது. அந்த வாயிதழின் சுவையை அந்தச் சங்கு அநுபவிக்கிறதே! அதை அணுகினால் அந்த

நுட்பத்தை. அந்த அநுபவத்தையல்லவா கேட்க வேண்டும் ?

காதல் உள்ளம் அதைத்தான் கேட்க விழைகிறது. ஆனால் பெண் உள்ளம் அதைக் கேட்க நாணுகிறது. காதல் உணர்ச்சியை நாணம் குறுக்கே இருந்து தடுக்கிறது. அதனால் அவனுடைய திருவாய் மணத்தைக் கேட்பாளைப் போலத் தொடங்கி, முதலில் செயற்கை மணத்தைப் பற்றி உசாவிப் பிறகு இயற்கை மணத்தைக் கேட்டாள். இப்போது காதல் உணர்ச்சி முந்துகிறது. 'இனி ஒளிவு மறைவு என்ன? கேட்டுவிடலாம் ; நாம் விரும்பியதைக் கேட்டுவிடலாம்' என்ற துணிவு உண்டாகிறது. ஆனாலும் நாணம் தடுக்கிறது. அந்த வாயின் சுவையைக் கேட்கத் தொடங்கும்போது நேரே அதைக் கேட்காமல், சுற்றி வளைத்து, அந்தத் திருவாயின் செவ்வண்ணத்தை முதலில் சிறப்பிக்கிறாள்.

திருப்பவளச் செவ்வாய்தான்...

இனி அவளால் தாங்க முடியாது. கேட்க வேண்டியதைக் கேட்கத்தான் வேண்டும். நாணம் இது வரைக்கும் தடுத்தது போதும். இனி அதற்கு வேலை இல்லை. இதோ கேட்டே விடுகிறாள்.

திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ

காதல் உணர்ச்சி விஞ்சி, கேட்க வேண்டியதைக் கேட்டு விடுகிறாள்.

'' எதற்காக இவற்றைக் கேட்கிறாய் ?'' என்று ஆழி வெண் சங்கு கேட்காது. இவள் பேச்சைக் கேட்க நேருபவர் யாரேனும் கேட்கக் கூடுமே ! அந்தக் கேள்விக்கு விடை சொல்பவளைப் போல் மேலே சொல்கிறாள்.

மருப்பொசித்த மாதவன்றன்
வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் ;
சொல்லாழி வெண்சங்கே !

'குவலயாபீடம் என்ற யானையின் கொம்பை ஒடித்த மாதவனுடைய திருவாயின் சுவையையும் நறுமணத்தையும், விரும்பிக் கேட்கிறேன்; ஆழிவெண் சங்கே, சொல்' என்கிறாள்.

இங்கே கோதையின் உள்ளத்துணர்ச்சி அவளை அறியாமலே வெளியாகி விடுகிறது. ஒருவனுடைய வீரத்தைக் கண்டு வியக்கும் மகளிர் அவனிடம் காதல் கொள்வார்கள். ஆளழகனாகிய கண்ணபிரான் ஆண்மை அழகனும்கூட. அவன் இளமைக் காலத்திலேயே கம்சனுடைய பட்டத்து யானையின் பல்லைப் பிடுங்கி வீரச் செயல் விளைத்தவன். ஆகவே கண்ணபிரானைச் சொல்லும்போது கோதைப் பிராட்டிக்கு இந்த வீரச் செயல் நினைவுக்கு வருகிறது. ஆய்ப்பாடி மட்டும் கண்ட சகடாசுர வதம் முதலியவற்றைச் சொல்லாமல், அகில உலகமும் அறிந்த இந்த வீரச் செயலை எண்ணுகிறாள். அதற்கு மேல் சொல்கிறாள் : 'அவனுடைய வாய்ச் சுவையையும் நறு நாற்றத்தையும் தெரிந்து கொள்ள விரும்பிக் கேட்கிறேன்' என்கிறாள்.

அவளுக்கு உள்ளூற இருக்கும் விருப்பம், அவனுடைய வாய்ச் சுவையை அறிந்து கொள்வதில்தான். ஆனால் உடனடியாக அதைக் கேட்காமல், மணத்தை முதலில் கேட்டுப் பிறகு சுவையைக் கேட்கிறாள். ஆனாலும் அவளுடைய உள்ளக் கிடக்கை அடுத்தபடி வெளியாகி விடுகிறது. 'ஏன் கேட்கிறாய்?' என்ற வினாவுக்கு விடை கூறுபவளைப் போலச் சொல்ல வருகிறவள், தான் கேட்ட முறைப்படியே 'வாய் மணமும் சுவையும் விருப்புற்றுக் கேட்கின்றேன்' என்றல்லவா சொல்ல வேண்டும் ? அப்படிச் சொல்லவில்லை. 'வாய்ச் சுவையும் நாற்றமும் விருப்புற்றுக் கேட்கின்றேன்' என்கிறாள். சுவை முந்தி வந்து நிற்கிறது. அவள் பெரு விருப்பம் அதில்தானே இருக்கிறது ? இதை, 'நெஞ்சு மிக்கது வாய் சோர்தல்' என்பார்கள். உள்ளத்தில் உள்ளது தன்னை அறியாமலே வாயில் வந்துவிடுமாம். அப்படி, கோதைப் பிராட்டிக்கு எதிலே குறி என்பது, வாய்ச் சுவையை முன் வைத்துச் சொல்வதிலே தெரிந்து விடுகிறது. அது மட்டுமா ?

'வாய்ச் சுவையும் நாற்றமும் விருப்புற்றுக் கேட்கின்றேன்' என்று சொல்கிறாள். அந்த விருப்பம் எது? பாட்டு இரண்டு வகையில் பொருள் செய்யும்படி அமைந்திருக்கிறது. கேட்பதிலே விருப்பமா, சுவையிலும் நாற்றத்திலும் விருப்பமா ? 'கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் என்ற ஆசையினால் கேட்கிறேன்' என்றும் அதற்குப் பொருள் சொல்லலாம். 'வாயின் சுவையையும் அதன் நறுமணத்தையும் நுகரும் விருப்பத்தைப் பெற்றேன்; அதனால் கேட்கிறேன்' என்றும் பொருள் சொல்லலாம். முன் சொன்னது ஊருக்குச் சொன்னது. பின் சொன்னது உள்ளத்தை வெளிப்படுத்துவது. 'வாய்ச் சுவையும் நாற்றமும்' நுகர்வதையே அவள் விரும்புகிறாள். ஆனால் அதை வெளிப்படையாகச் சொல்வதற்கு நாணம். ஆகவே கேட்பதில் விருப்பம் உடையவளைப் போலக் கேட்கிறாள். என்றாலும் அவளை அறியாமலே அந்தப் பேச்சில் அவள் உள்ளத்தின் ஆழத்தில் உள்ள ஆசை, தணியா விருப்பம், புலப்பட்டு விடுகிறது.

கண்ணன் திருவாய் திருப்பவளச் செவ்வாய் ; அங்கே கருப்பூர மணம் கமழும். இவை பிறரும் அறியலாம். அது கமலப் பூ மணம் கமழும். அதை முத்தமிட்ட தாய்மாரும் உணர்வர். ஆனால் அது தித்திருப்பதைக் காதல் கொள்வாரே அறிவர். அதை விரும்பிய கோதைப் பிராட்டி, வெண்சங்கைப் பார்த்துச் சொல்லும் இந்த அழகிய பாசுரத்தில், அவளுடைய காதலும் நாணமும் போராட்டம் நிகழ்த்திக் காதலே வென்றுவிடும் குறிப்பைப் பார்க்கிறோம்.

கருப்பூரம் நாறுமோ ?
கமலப்பூ நாறுமோ ?
திருப்பவளச் செவ்வாய்தான்
தித்தித் திருக்குமோ ?
மருப்பு ஒசித்த மாதவன்றன்
வாய்ச் சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் ;
சொல்லாழி வெண்சங்கே !

உனக்கு ட்ரூ
பிடிக்குமா?

யாருக்குதான்
பிடிக்காது?

ட்ரூ மாரி, எந்நேரமும் சுவைக்கச் சிறந்த பிஸ்கட்.

தேநீர், காபி அல்லது எந்த பானத்துடனும் சுவைத்திட மொறுமொறுப்பான பிஸ்கட்.
உங்கள் குடும்பத்தினருடன் பகிர்ந்து மகிழ சிறப்பான சுவை.

இந்தியாவில் நவீனமான தொழிலகத்தில் சுகாதார முறைப்படி தரமாக தயாரிக்கப்படுபவை.




ட்ரூ பிஸ்கட்டுகள் மொறுமொறுப்பானவை.
புதுமணம் குன்றாமல் ருசி மிக்கவை.

**TRUE**

**ட்ரூ**

**-பகிர்ந்திட விரும்பும் தரமிகுசுவை**



HT-AFP-8021

ஆரோபுட் பிரைவேட் லிமிடெட், ஆரோவில் — பாண்டிச்சேரி

# ஆயிஷாவின் காதல்

"தான்"



சரத் கால சந்திரன் பாலாபிஷேகம் செய்து கொண்டிருந்த தாஜ்மகலின் பளபளத்த பளிங்கு எழிலைப் பருகிக் கொண்டே அந்த இடத்தை விட்டகலச் சற்றேனும் மனமில்லாமல் புல் தரையில் அமர்ந்திருந்தேன். காலம் போவது தெரியாமல் தாஜ் எழுந்த காதல் கதையை மனத்தில் சுவைத்தெண்ணிய படி அக்கற்காவியத்துக்குச் சொற்காவியம் ஒன்று சோடிக்க முடியுமா என்று கற்பனை, யாப்பிலக்கணத்துக்குள்ளும் அகராதிக்குள்ளுமாக அலைந்து கொண்டிருந்தது. பாலடைப் பரிசலாக முழுமதி வானில் மிதந்து கொண்டிருந்தது.

என் தோளை அன்னியோன்னியமாக யாரோ தொட்ட உணர்வு ஏற்பட்டுக் கவிதை புனையும் முயற்சியைக் கைவிட்டுத் தோளைத் தொட்டவர் கையைப் பற்றினேன். அது சில்லென்றிருந்தது. தலையை நிமிர்ந்து பார்த்தேன். தாடி வைத்துத் தலைமொட்டையான முஸ்லிம் ஒருவர் நின்றிருந்தார்.

'' எழிலில் ஈடுபட்டு இருப்பதைக் கலைக்க வருத்தம்தான். அப்படி நான் எல்லோரையும் கலைப்பதில்லை. விசேஷமாக என்னைப் பற்றி நான் சொல்ல விரும்பும் ஒருவரின் சிந்தனையைத்தான் நூறு ஆண்டுகளுக்கு ஒரு தடவை நான் கலைப்பேன். உட்காரலாமா, இல்லை என்னோடு உலவுகிறீர்களா?'' என்று கேட்டார் அவர்.

அவருக்கு நாற்பது வயது இருக்கும். கூர்மையான பார்வை. பாரசீக நாசி. கட்டுமஸ்தான நெடிலான தோற்றம். நாவில் பண்டைய முஸ்லிம் தர்பார்களில் உள்ள நயமான பாரசீகச் சொற்கள், தூக்கலான உருது.

'' நடக்கலாமே. சலவைக் கல் சின்னத்தைச் சலவை செய்யும் நிலவிலே அதைச் சுற்றித்தான் வரலாமே?'' என்று எழுந்தேன்.

சற்றே எட்டி எளிய உடையில் ஓர் எழிலரசி, ஏழைகள் ஆடையில் எழுந்து வந்த மும்தாஜ் இவளோ என்று ஐயுறச் செய்து கொண்டு நின்றாள்.

''ஆயிஷா, என் மனைவி, அவள் ஓர் இந்து. அதனால்தான் முகத்தைத் திரையிட்டு மறைத்துக்கொள்ளவில்லை'' என்று அந்த முஸ்லிம் அவளை அறிமுகம் செய்வித்து, ''நான் முகமத் இக்பால், வாருங்கள் மூவரும் சின்னத்தை வலைய வருவோம்'' என்றார்.

நடக்கும்போது எங்களுக்கு முன்னே நடந்த ஆயிஷா நிலவில் நிழல் சாய்க்கவேயில்லை. நான் இக்பால் நிழல் சாய்க்கிறாரா என்று பார்த்தேன். அவரும் நிழல் சாய்க்கவில்லை. என் ஒரு நிழல்தான் எங்கள் மூவருடன் நகர்ந்தது. என் உடல் சிலிர்த்து நெற்றி வியர்வை பூத்தது. தாஜைப் பார்க்க வந்த பலப்பல மக்கள் வந்தும் போய்க் கொண்டும் இருந்தனர். அவர்கள் நிழல்கள் தரையில் கத்திரிக்கோல் நடனம் இட்டன. ஆகையால் நான் தனி உலகில் பிடிபடவில்லை என்ற துளி தைரியம் பிறந்தது. இந்தத் தம்பதியைவிட்டு நழுவி விடலாம் என்று யோசித்தேன். இக்பால் என் கையைப் பற்றினார். ''அப்படியில்லை, இப்படி வாருங்கள், இந்தப் பக்கமாக'' என்றார். அவர் கைச் சிலிர்ப்பு எனக்கு மெய்சிலிர்ப்பை உண்டாக்கியது.

'' ஏன் நடுக்குகிறது. உங்களுக்கு? அப்படி இன்னும் குளிர் வரவில்லையே?'' என்று இக்பால் கூறி என்னைத் தாஜின் நிழல் படியும் பக்கத்துக்கு இட்டுக் கொண்டு போனார். அங்கே ஆயிஷாவின் அழகொளியால் தான் இருக்க வேண்டும். ஒரு சிறு குட்டை அளவுக்கு அவளைச் சுற்றி வட்ட ஒளி படர்ந்து தொடர்ந்து வந்தது.

''உலகத்திலேயே அமரக் காதலர்கள் கதை ரொம்ப இருக்கிறதல்லவா ?'' என்றார் இக்பால்.

''லைலா மஜ்னு, ரோமியோ ஜூலியட், ஷாஜஹான் மும்தாஜ், பிரிதிவிராஜ் சம்யுக்தை.....''

''உலகத்தில் காதல் புனிதமானதல்லவா?''

''ஆமாம். ஆதி காவியங்களே மனிதனின் ஆதி உணர்ச்சியான காதலை அடிப்படையாகக் கொண்டவைதாம்.''

''லைலா மேல் மஜ்னுக்கு இருந்த காதலைவிட, ஜூலியட் மேல் ரோமியோவுக்கு இருந்த காதலைவிட, மும்தாஜ் மேல், ஷாஜஹானுக்கு இருந்த காதலைவிட சம்யுக்தை மேல் பிருதிவிராஜுக்கு இருந்த காதலைவிட எனக்கு ஆயிஷா மேல் காதல் குறைவா ?'' என்றார் இக்பால்.

'' எனக்கும் என் மனைவியின் மேல் அத்தனை காதல்தான்'' என்றேன், இக்பால் கேள்விக்கு எதிர்முகப் பதில் அளியாமல்.



'' அதனால்தான் அவளை அழைத்து வரவில்லையாக்கும்'' என்றாள் ஆயிஷா தேன் கசியும் சொல்லில்.

பதில் சொல்லப் பத்து விடைகள் இருந்தன. அவைகளைச் சொல்ல வாய் எடுக்குமுன், ''ஆயிஷாவுக்கு என்னால் ஒரு தாஜ் கட்ட முடிந்ததா ? இல்லை, எங்கள் காதலை எந்தக் கவியாவது அமரத்துவம் எய்தக் காவியம் படைத்திருக்கிறானா ? அரசக் காதல்கள் தாமே முரசொலிக்கிறது ?'' என்றார் இக்பால்.

''கவி காதுக்குக் கண்ணுக்கு உங்கள் காதல் எட்டியிருக்காது.''

'' நன்றாகச் சொன்னீர்கள். ஷாஜஹான் காலத்தில் இருந்த ஒவ்வொரு கவிக்கும் எங்கள் காதலைப் பற்றித் தெரியும். ஒரு பயல்கூட இரண்டு அடிகள்கூட எழுதவில்லை.''

'' நீங்கள் யார் ?''

யமுனையிலிருந்து ரம்யமான காற்று ஒரு பாட்டம் வீசியது, என் ஆடையை அசைத்துக் கொண்டு. அவர்கள் ஆடைகள் அசையவே இல்லை.

'' நான் தாஜ்மஹால் அடிக்கல் நாட்டிய நாள் முதல் அது கட்டத்தட்ட முடியும் வரையில் வேலை செய்தவன் கொத்தனாக. என்னோடு ஆயிஷாவும் வேலை செய்யத் தொடங்கினாள். நாங்கள் கொத்து வேலையில் அமர்ந்த போது நல்ல வாலிப வயது. நான் வெட்டிய மண்ணை அவள் அள்ளிக் கொண்டு போய்க் கொட்டுவாள். பிறகு நான் கற்கள் அடுக்கும் இடத்துக்குக் காரைக் கூடை கொண்டு வருவாள்.''

'' அஸ்திவாரத்தில் ஆரம்பித்த நட்பு காரை பூசுகையில் கெட்டிப்பட்டதாக்கும்'' என்றேன்.

ஆயிஷா தலையைக் குனிந்து கொண்டாள். இக்பால் இளமுறுவல் பூத்தான்.

''விஷயம் இத்தாலிய இன்ஜினீயர் இந்திய இன்ஜினீயர் வரை எட்டியது. அங்கே எத்தனை போட்டி ஆயிஷாவை என்னிடம் இருந்து பற்ற. எல்லோருக்கும் என்னிடம் அச்சம். ஒருவனுக்கும் என் முன் மல்லுக்கு நிற்கத் தைரியம் கிடையாது. மேலும் ஆயிஷாவின் காதல் ஒரு பாறை. அசைக்க முடியாது. பதவி பெற்ற இடத்துக்கு அவள் அன்பைச் சற்றுச் சாய்த்து மாற்றியிருந்தாலும் என் பலமெல்லாம் போயிருக்கும். ஒருவரையும் என்னால் வெல்ல முடியாது. அவளது திண்ணிய காதல் என் தோளுக்கு அதிக வலிமை கொடுத்தது.''

''அரசனுக்கு எட்டவில்லையா ?''

'' எட்டிற்று. சோகத்துக்குச் சின்னம் எழுப்பும் கட்டமாக இல்லாமலிருந்தால் அரசனும் ஆயிஷா மேல் ஆசை காட்டியிருப்பான். யார்தான் மாட்டார்கள்? எனக்கே பல பெரிய மனிதர்கள் அவளிடம் ஆசை காட்டுவது பொறுமையாக இருந்தாலும் பெருமையாகத்தானே இருந்தது. யாவரும் விரும்புவது என்னையே விரும்புகிறது என்பதில் எத்தனை கர்வம். இல்லையா?''

''ஆமாம்.''

'' நான் காதல் காரணமாக வேலையைக் கணக்க விடுவதில்லை. காரணம், காதல் கொண்டவனுக்குத்தானே காதலின் வன்மை தெரியும். ஆனாலும் என் மேல் பொறாமைக்காரர்கள் கோள் சொல்லி வந்தனர். ஷாஜஹானே சவுக்கை எடுத்து ஒரு தடவை வந்தார். ஆயிஷா காரை கொண்டு வந்தாள். என் அருகில் அவள் இருந்தாள். நான் அவள் இருப்பதைக் கவனிக்காமலேயே

காரையைப் பூசிக் கொண்டிருந்தேன். அரசன் என்னை அழைத்திருக்கிறார். நான் திரும்பவில்லை. கூட வந்த அதிகாரி அதற்காகச் சவுக்கை வீசியிருக்கிறார். ஆயிஷா எனக்கும் சவுக்குக்கும் இடையே வந்து, 'வேலை செய்கிறவனைத் தடுத்தால் கெடுவுக்குள் வேலை முடியுமா?' என்று கேட்டிருக்கிறாள். அரசன் நகர்ந்து விட்டான். ஆயிஷாவுக்கு அடிபட்டதும் எனக்குத் தெரியாது. இரவு தான் அவள் சொன்னாள்.

அரசன் என்னைத் தண்டிக்கவில்லை என்பதற்காக ஆயிஷா மேல் ஆசைப்பட்ட அதிகாரிகள் அவளை எடுத்ததற்கெல்லாம் தண்டிக்கத் தொடங்கினர்.

''அரசனிடம் நீ புகார் செய்யவில்லையா ?''

''உலகத்தில் அரசாள்பவர்கள் எல்லோரிடமும் ஒரு பெரிய குறை. தம்மை நெருங்கித் தம் அலுவல்களில் பணி புரியும் எவரையும் அவர்கள் என்ன குற்றம் செய்தாலும் தண்டிப்பதில்லை. அவர்கள் கெடுவதற்கு அரசர்களின் இந்தப் பலவீனமே எப்போதும் முதற் பெரும் காரணம்'' என்றான் இக்பால்.

''ம்.''

''எனக்கு என் ஆயிஷா மேல் சந்தேகம் வரத் திட்டங்கள் போட்டனர். ஓர் இரவு அவளுக்கு மயக்கம் தந்து ஓர் அதிகாரியை அவளிடம் சயனிக்கச் செய்து என்னிடம் வந்து சொல்லியிருக்கிறார்கள். நான் உள்ளே சென்றேன். கையில் கொத்து வேலைக் கரணை இருந்தது. அதிகாரி எழுந்து எக்காளம் செய்தான். அவள் எழவில்லை. நான் யூகித்தேன், அவள் மயங்கியிருக்கிறாள் என்று. அவன் குடலில் கரணையைப் பாய்ச்சினேன். மாண்டான். அரசன் நீதி வரையில் விஷயம் போகவில்லை. போனால் குற்றம் எப்படி ருசுவாகும் என்று உணர்ந்த விஷமக்காரர்கள் அவர் சாதாரணமாகச் செத்துப் போய்விட்டார் என்று அடக்கம் செய்துவிட்டனர்.''

'' அப்படியா ? இதுவரையில் என்னிடம் சொல்லவில்லையே?'' என்றாள் ஆயிஷா ஒளி வட்டத்திலிருந்து.

''முந்நூறு வருஷமாக உன் மேல் சந்தேகம் இல்லை என்று காட்டத்தான். இதற்கு முன்னால் சின்னச் சின்ன விஷயங்களிலும் சந்தேகம் வரச் செய்திருக்கின்றனர். ஒன்றையும் உனக்கு அறியப்படுத்தியதில்லை. ஏன் என்றால் நீ பயப்பட்டுக்கொண்டே இருப்பாய் என்று.''

''நான் பயப்படுவேன் என்ற சந்தேகம் இருந்ததே, தப்பில்லையா? என் இக்பால் ஒரு நாளும் என் மீது யார் சொன்னாலும் சந்தேகப்படமாட்டார் என்ற மனம் என்னிடம் இருந்ததை நீங்கள் அறிந்து கொள்ளவில்லை என்பது இப்பத்தான் தெரிகிறது'' என்று அரை உண்மைச் சினமும் அரைப் பொய்ச் சினமுமாக அப்பேய்ப் பெண் சிணுங்கியது வெகு வசீகரமாக இருந்தது.

''ஆண் மனசுக்கு எப்பவும் கொஞ்சம் விட்டுக் கொடுக்கணும். உண்மையில் பலவீனமானது ஆண் மனசுதான்'' என்றான் இக்பால்.

''அப்புறம்?''

''தாஜ் கட்டி முடியும் தருவாயில் அரசன் இழவுனான். நாங்களும் நடு வயதுக்கும் அப்பால் போய்விட்டோம். கல்லும் காதலும் காலத்தால் நிற்கும்; சதை அப்படியா? தாஜ் எழ எழ எங்கள் எல்லோருக்கும் பெருமை, எங்கள் உள்ளமும் பூரித்துக் கொண்டே போயிற்று. இந்தக் காதல் கோயில் எழுவதற்குள் என்னைப் போன்ற எத்தனை கொத்தர்கள் அங்கு பணி செய்தவர்களைக் கல்யாணம் செய்து கொண்டனர் தெரியுமோ? அரசனுக்கு அதுவே பெரிய நினைவுச் சின்னமாக, சந்தோஷமாக இருந்திருக்க வேண்டும். காதலுக்குக் கல்லறை, கல்லறை கட்டுகையிலேயே காதல் கல்யாணங்கள்....''

''அரசனைவிட நீ இந்த முந்நூறு வருஷத்துக்கு அப்புறம் ரொம்பச் சந்தோஷப்படுறியே.''

''எல்லோரும் பிறர் சந்தோஷத்தில் தாம் சந்தோஷப்பட்டால் எத்தனை இன்பமான உலகத்தில் வாழலாம் தெரியுமா ?''

## நீதியின் அழகு!

இருபத்தி ஐந்தே வயதான உர்ஸுலா டிரிஸ்பா:ப் மேற்கு ஜெர்மனியில் ஒரு நீதிபதியாகப் பணியாற்றுகிறார். இவரை விட வயதில் குறைந்த நீதிபதி அங்கே கிடையாது: இவரை விட அழகான நீதிபதியும் இல்லை! சர்வதேச மாதர் ஆண்டில் இப்படி இன்னும் என்னென்ன புதுமைகளைப் பார்க்கப் போகிறோமோ ?

— ஜெர்மன் இன்டர்நேஷனல்



## ஈரோடு, ஸ்ரீ ரங்கபவனம் டிரஸ்ட் கட்டிட நிதிக்காக

சங்கீத கலாநிதி

**ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி - பாட்டு**



ஸ்ரீ கண்டதேவி அழகிரிசாமி — வயலின்

ஸ்ரீ காரைக்குடி மணி — மிருதங்கம்

ஸ்ரீ வி. நாகராஜன் — கஞ்சிரா

ஸ்ரீ டி. எச். விநாயக்ராம் — கடம்

●

**31 - 8 - 1975 ஞாயிறு மாலை 6-15 மணிக்கு**

**ஈரோடு, கருங்கல்பாளையம், 'கலாலயா' கலை அரங்கில்**


''தெரிந்தும் புரிந்து கொள்ளாததால் தான் திண்டாடுகிறோம். மேலே....''

''ஒருநாள் நான் மேல் வெங்காய வடிவப் பெரிய கும்பத்தில் கனத்த செதுக்கிய சலவைக் கல் பாளையைப் பொருத்திக் கொண்டிருந்தேன். என்ன கணிதமோ அந்தக் கோள் வடிவத்தில் பிசகாமல் அத்தனை துண்டுகளைக் கீழே செதுக்கி மெருகூட்டி மேலே ஏத்திப் பொருத்த. சிறு மயிரிழை செதுக்கல் தவறுகள் இருந்தால் அங்கேயே அதை ஒக்கப் பண்ணுவோம். கழிகளாலான காப்பு அமைப்பில் தேகத்தைப் பொருத்திக் கரணம் தப்பினால் மரணம் என்ற நிலையில் நின்று கொண்டு வேலை செய்து கொண்டிருந்தோம்.''

இக்பால் நிறுத்திவிட்டு ஆயிஷாவைப் பார்த்தான், காதல் மல்கும் விழிகளால்.

''நான் கீழேயிருந்து கூடையில் இரண்டு செதுக்கிய கல்களை வைத்து மேலே தூக்கிக் கொண்டு சென்றேன். நமாஸ் நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. அதை மேலே ஏற்றிப் பொருத்தி அவரும் கீழே வந்தால் தான் நேரத்துக்கு நமாஸில் சேரலாம்'' என்றாள் ஆயிஷா.

''பல பாட்டாளிகள் இறங்கிக் கொண்டிருந்தனர். கீழேயே இருந்தவர் கூடத்துக்கு அவசரம் அவசரமாக ஓடிக் கொண்டிருந்தனர்'' என்றான் இக்பால்.

'' நான் படிப்படியாக மரம் மரமாக ஜாக்கிரதையாகத்தான் கால்களைப் பதிய வைத்து ஒரு கையால் கழிகளைப் பற்றி ஒரு கையால் கூடையைப் பற்றி ஏறினேன். நான் ஏறும்போது ஓர் அதிகாரி சொன்னான் : 'ஆயிஷா, இந்த வயசில் இந்தக் கஷ்டம் வந்திராது, நீ காலா காலத்தில் என்னைக் கட்டியிருந்தால். இன்றும் நான் தயார். அந்தக் கல் கொத்தப் பயலை விட்டு விடு' என்றான். அவனை முறைத்துப் பார்த்துவிட்டு நான் மேலே சற்றுச் சினத்துடன்தான் ஏறி வந்தேன். இப்படியே இது நழுவி அவன் தலையில் விழாதா என்று எண்ணிக் கொண்டே ஏறினேன்'' என்றாள்.

''என் கைக்குக் கூடை வந்துவிட்டது என்று நான் அதைப் பற்றினேன்'' என்றான் இக்பால்.

'' அவர் பற்றியபோது நான் விடவில்லை, விட்டிருக்கவில்லை'' என்றாள் ஆயிஷா.

''கூடை நொடித்துக் கல் கீழே நழுவியது. மளமளவென்று கட்டைகள் முறிய வேகமெடுத்துக் கனத்தில் அதிகாரி தலையில் விழுந்தது. ரத்தவெள்ளம். ஆயிஷா அய்யோ என்று குனிந்தாள், நடக்கப் போவதை எண்ணி. கால் வழுக்கியது. அவளும் விழுந்தாள்'' என்று இக்பால் சொன்னதுமே ஆயிஷாவின் உருவம் சட்டென்று மறைந்தது.

தாஜ் நிழல்தான் மிச்சம். ஒளி வட்டம் இல்லாது கருத்த இடம் புது நிலை உண்டாக்கியது.

''நீங்கள் சொல்லுங்கள், ஷாஜஹானுக்கு மும்தாஜிடம் இருந்த அன்பைவிட எனக்கு ஆயிஷாவிடம் இருந்த காதல் எந்த அளவில் குறைந்தது?''

''அன்புள்ள எந்தத் தம்பதியும் ஒருவருக்கொருவர் குறைந்தவர்கள் இல்லை.''

'' நான் ஆயிஷாவுக்குச் சின்னம் சலவைக் கல்லில் கட்ட முடியுமா ? அவள் மேல் மண் முட்டைத்தானே எழுப்ப முடிந்தது! அதன் மேல் ஒரு செதுக்கிய சலவைக் கல் தாமரையை என் அன்பின் அடையாளமாக வைத்தால் என்ன என்ற ஆசை முளைத்தது. ஆசை நாளடைவில் பைத்தியமாகி உலுக்கியது. சிற்பி செதுக்கி இழைத்த தாமரை ஒன்றிருந்தது. இப்படித்தான் ஒரு முழுமதி இரவிலே நான் அதைத் திருடிப் போக வந்தேன், என் மனைவி மேல் வைத்த மண்முட்டில் பதிக்க. மனசில் திருட்டுக்கு நியாயப்படுத்தியும் கொண்டேன். மக்கள் வரியில் அரசன் மனைவிக்கு நினைவுச் சின்னம் கட்டுவது நியாயமானால், மடிந்த என் மனைவிக்கு ஒரு சலவைக்கல் தாமரை எடுப்பது குற்றமா ? நான் பிடிபட்டேன். விசாரிக்கப்பட்டேன். பயமில்லாமல் மனத்தில் பட்டதைச் சொன்னேன். எந்த ஆள்பவன், அவன் எத்தனை பரந்த மனப்பான்மை உள்ளவனாக இருக்கட்டுமே, தன் குற்றத்தை எடுத்துக் குடிமகன் சொல்வதைப் பொறுப்பான்? எனக்குச் சிரச்சேதம் ஆக்ஞை. ஆனால் விசாரணை வெளி வரவில்லை, நான் சொன்ன காரணத்தால். ஆகையால் சரித்திரம் இதை அறியாது'' என்ற இக்பால் மறைந்தான்.

**கா**தல்....

இந்த மூன்றெழுத்தின் பெருமை அளவிட முடியாதது. முப்புரம் எரித்தவனையே 'ஒரு கை பார்த்த' வல்லமை இதற்கு உண்டு. காதலின் விளைவால் சரிந்த சாம்ராஜ்யங்கள் எத்தனையோ! அழிவு என்ற மூன்றெழுத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டது காதல். வரலாற்று இலக்கியத்தைப் புரட்டினோமானால் சரித்திரத்தின் போக்கையே மாற்றி அமைத்த காதல்கள் பலவற்றைக் காணலாம். பல பேரரசுகளின் சரிவுக்குக் காதலே காரணமாக இருந்திருப்பது புலனாகும்.

புராதன கிரேக்கர்களின் காலத்திலே **ஹெலன்** என்றொரு கட்டழகி. காதல் தெய்வத்தின் பரிபூரணமான ஆசியைப் பெற்றிருந்த பேரழகி. முற்றும் துறந்த ஞானிகூட ஒரு முறை அவளைக் கண்டால் இல்லறத்தில் இச்சை கொண்டு விடுவான். இந்த ஹெலனின் அழகிலே சிந்தையைப் பறிகொடுத்தான் சுந்தர புருஷனான டிராய் நகரத்து இளவரசன் **பாரிஸ்**. முறைப்படி அவள் தனக்கு மனைவியாகமாட்டாள் என்பதை அறிந்த பாரிஸ், அழகி ஹெலனைக் கவர்ந்து சென்றான். காதலின் வேகம் எதையும் செய்யும் துணிவைக் கொடுக்கும். அழகி ஹெலனை மீட்க, கிரேக்கர்கள் டிராய் நகர் மீது பெரும் போர் தொடுத்தார்கள். டிராய் நகர் தரைமட்டமானது. ஹெலன் மீது கொண்ட காதலால் ஓர் அழகிய நகரமே அழிந்தது. ஹெலனின் காதலும் டிராய் நகரின் அழிவும் உலகப் பிரசித்தமானது.

ஹெலனைப் போலவே ஓர் அழகி நம் பாரதத்திலும் இருந்தாள். அவளது அழகால், காதலால் இரண்டு பேரரசுகளிடையே பெரும் போர் மூண்டது. பாரதத்தில் அந்நியர்களின் ஆதிக்கத்துக்கும் அடிகோலியது. அந்த அழகி **சம்யுக்தை**. கன்னோசி மன்னன் ஜெயசந்திரனது செல்வமகள்..... ஹெலனையும் மிஞ்சும் அழகி சம்யுக்தை. பாரிஸையும் விஞ்சும் பராக்கிரமம் படைத்தவன் தில்லி வேந்தன் **பிருதிவிராஜன்**. பிருதிவியின் பெருமையையும் அழகையும் ஆண்மையையும் கேட்டறிந்தாள் சம்யுக்தை. மணந்தால் அவரையே மணப்பது என்ற உறுதியும் கொண்டாள். அதே மாதிரி சம்யுக்தையையே தன் மனைவியாக்கிக் கொள்ளுவது என்ற முடிவோடு இருந்தான் பிருதிவி. ஜெயசந்திரனும், பிருதிவியும் பிறப்பால், இனத்தால் உறவினர்களானாலும் எண்ணத்தால் விரோதிகள். பகைவனுக்குத் தன் மகளை மணம் முடித்துத் தர விரும்பாத ஜெயசந்திரன் மகளின் சுயம்வரத்துக்கு ஏற்பாடு செய்து அதே பந்தலில் பிருதிவியை அவமானப்படுத்தவும் எண்ணி நுழைவாயிலே காவல்காரனாக அவன் சிலையை நிறுத்தி வைத்தான். ஆனால் அழகி சம்யுக்தையோ கொஞ்சமும் தயங்காமல் தன் நெஞ்சில் இடம் கொண்டவனான பிருதிவியின் சிலைக்கே மாலையிட்டாள். காதலியின் உள்ளம் அறிந்த பிருதிவி அப்படியே அவளை அள்ளித் தன் குதிரை மீது அமர்த்திக் கொண்டு பறந்தான் தில்லியை நோக்கி.

இதன் விளைவாக நடந்த பல போர்களிலே கன்னோசியிலிருந்து டில்லி வரை இறந்த மனித உடல்களால் நடை பாவாடை போடப்பட்டது. ரத்த ஆறு ஓடியது. பிருதிவியை வெற்றி கொள்ள முடியாத ஜெயசந்திரன் பகை முடிக்க, தருணம் நோக்கிக் காத்திருந்த முகமது கோரியை இரு கரம் நீட்டி வாவென்று அழைத்து வரவேற்று உறவாடினான். முடிவு? பாரதத்தின் தலை சிறந்த வீரனான பிருதிவி







# சரித்திரத்தை மாற்றி

போர்க்களத்திலே சரிந்தான். அந்நியர்கள் வெள்ளமென உள்ளே புக வழி வகுத்துக் கொடுத்தது பிருதிவி, சம்யுக்தையின் காதல் தானே ?

**மகா அலெக்சாந்தரின்** மரணத்திலே கூடக் காதல் விளையாடி யிருப்பதாக ஒரு கதையுண்டு. போரஸ் மன்னரின் வீரங் கண்டு வியந்த மகா அலெக்ஸாந்தர் தம் போர் வெறியை அத்துடன் நிறுத்திக் கொண்டு திரும்பியபோது அவர் சிந்தை யைக் கவர்ந்தவள் ஓர் இந்தியப் பெண். அவளைத் தம் காதலியாக்கி அழைத்துப் போனாராம். இல்லை, வஞ்சம் தீர்க்க ஒரு வஞ்சியை மன்னனோடு அனுப்பினானும் இந்திய மன்னன். அவள் ஒரு விஷக் கன்னி. அந்த அழகியோடு விரும்பி உறவு கொண்ட அலெக் சாந்தரின் உடலிலே கொஞ்சம் கொஞ்சமாக விஷம் ஏறியது. தாய்நாடு திரும்ப முடி யாமலே நடு வழியிலேயே அவர் விதியை முடித்து வைத்தவள் அந்த விஷக் கன்னி. அவளிடம் கொண்ட காதலால் அல்லவா மகா அலெக்சாந்தருக்கு இந்தக் கதி?

எகிப்தின் இளவரசி **கிளியோபாட்ராவின்** அழகும் காதலும் காவியங்களாக வடிக்கப் பட்டிருக்கின்றன. ஆன்டனியை ஆட்டிப் படைத்த இந்த ஆரணங்கு அந்த மாவீர னின் அழிவுக்கும் காரணமானாள். அவள் ஆடிய காதல் நாடகங்களின் முடிவோ, தன் மீதே நச்சரவைக் கடிக்க விட்டுக் கொண்டு நாசமானதோடு தன் நாட்டின் நாசத்துக்கும் வித்திட்டதைச் சரித்திரம் கூறுகிறது.

எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னே ராஜ புதனத்திலே வாழ்ந்திருந்தாள் ஓர் ஒப்பற்ற அழகி. அவள்தான் சித்தூர் **ராணி பத்மினி**. அவளது கண் நிறைந்த கணவன், மன்னன் பீம்சிங். இணையில்லாத ஜோடி. பத்மினியின் அழகிலே பாரதமே கர்வம் கொண்டிருந்தது. அப்படிப்பட்ட அழகு தனக்குச் சொந்தமாக வேண்டுமென்ற தகாத எண்ணம் கொண் டான் டெல்லியிலே ஆட்சி செலுத்திய தார்த்தாரியனான **அலாவுதீன்**. மாற்றான் மனைவியைத் தன் மனைவியாக்கிக் கொள்ள ஆசை கொண்டவன், ஆணையிட்டனுப்பினான் ரஜபுத்திர ராஜனுக்கு, பத்மினியைத் தன் னிடம் அனுப்பி வைக்கும்படி. அந்நியனின் அநீதமான ஆசை கேட்டு ரத்தம் கொதித் தான் பீம் சிங். விளைவு வினையாயிற்று. அழகி பத்மினியை அடைந்தே தீருவது என்ற ஆசை வெறியிலே அலாவுதீன் சித்தூர் மீது படையெடுத்து வந்தான். பிறன் மனை வியைப் பெண்டாள விரும்பிப் போர் தொடுத் திருக்கும் தார்த்தாரியனைச் சும்மா விடுவார் களா ரஜபுத்திரர்கள்? அவமானப்பட்டுப் போனான் அந்த அந்நியன். ஆனாலும் ஆசை வெட்கமறியாது என்பதுபோல் பத் மினி என்ற அழகுச் சிலையைக் கண் குளிர ஒரு முறை காணவாவது அனுமதி வேண்டினான் அலாவுதீன். தன் மனைவியின் அழகை மாற்றான், அதுவும் பிற மதத்தினன் காமக்கண் கொண்டு பார்ப்பதை விரும்ப வில்லை மன்னன் பீம்சிங். தவிர, ரஜபுத்திர மங்கை யர் பர்தா அனுஷ்டிப் பவர்களாயிற்றே. பிறர் முன்னால் முகத் திரை இன்றி வரமாட் டார்கள். அலாவுதீனோ கெஞ்சினான்; மன்



# அழித்த காதல்கள்

முடியும், பத்மினியின் அழகை எப்படியாவது தான் காணச் செய்ய வேண்டுமென்று. அது தூய காதலல்ல. அநீதமான, அதர்மமான ஆசை என்பது பீம்சிங்கிற்குத் தெரியும். ஆனால் டில்லி வேந்தன் இன்று தோல்வி கண்டு தொய்ந்து நின்றாலும் நாளை அடிபட்ட வேங்கையாகப் பாய்வான். அதனால் பாரதப் புதல்வர்கள் பலர் மடிய வேண்டி இருக்குமே என்று எண்ணி; கண்ணாடியில் தன் கண்ணாட்டியின் உருவத்தைக் காணச் செய்து, அந்தக் காமுகனைத் தன் எல்லை விட்டுச் செல்ல வைப்பதே சிறந்த வழி என்று செயல்பட்டான். பகைவனை விருந்தாளியாகப் பாவித்துக் கோட்டைக்குள்ளே கூட்டி வந்தான் பீம்சிங். அரண்மனைக்குள்ளும் அழைத்துப் போய் விருந்து படைத்தான். அவன் ஆசைப் பசிக்கும் ஆகாரமாகப் பெரிய நிலைக் கண்ணாடியிலே தன் அழகு மனைவி பத்மினியின் உருவம் தெரியும்படி அமைத்துக் கொடுத்தான். வெறும் செய்திகளைக் கேட்டே தன் சிந்தையிலே மோக வெறியை வளர்த்துக்கொண்டிருந்த அலாவுதீன் அந்தப் பேரழகுப் பெட்டகத்தைக் கண்முன்னேயே கண்ட போது, அட அடா! அவன் நெஞ்சத்திலே தணிந்திருந்த ஆசை வெறி குபீரென்று கனன்றது. வெல்லமுடியாத சித்தூர்க் கோட்டையை வஞ்சகத்தினால் வீழ்த்தித் தன் ஆசையைத் தீர்த்துக் கொள்ள முடிவெடுத்தான்.

விருந்தாளிக்கு விடை கொடுத்தனுப்பக் கோட்டைக்கு வெளியே ஆயுதமின்றி காவலின்றிக் கண்ணியமான எண்ணத்துடன்வந்த பீம்சிங்கைக் கைது செய்து தன் பாசறைக்குக் கொண்டுபோனான் தார்தாரியன். கணவனின் விடுதலைக்குக் கட்டழகி பத்மினியையே பணயமாகக் கோரினான் அலாவுதீன். பத்மினி வெறும் அழகி மட்டுமல்ல. கற்பரசி, கலங்காத உள்ளம் கொண்ட மாதரசி. தனது சாதுரியத்தினால் அந்தக் கயவனின் பிடியிலிருந்து கணவனைச் சிறை மீட்டதையும் அவமானப்பட்ட அலாவுதீன் சித்தூரையே தரை மட்டமாக்கியதையும் சரித்திரம் கூறுகிறது. வெற்றிக் களிப்போடு சித்தூரினுள்ளே திருமண ஆசையோடு புகுந்த அவனைத் தீயிலே வேகும் பெண்ணரசிகளின் நிணவாடையே வரவேற்றது. யாரை அடைய வேண்டும் என்று இத்தகைய அட்டூழியங்களைச் செய்து உள்ளே புகுந்தானோ அந்த அழகு உடலை அக்கினி தழுவிக் கொண்டிருப்பதைக் கண்ட அலாவுதீனின் ஆத்திரம் எல்லை மீறிப் போயிற்று. சித்தூர் நகரின் அழகிய கட்டிடங்களையெல்லாம் இடித்துத் தள்ளச் செய்தவன், பத்மினி வாழ்ந்த அரண்மனையை மட்டும் இடிக்காமல் விட்டுச் சென்றது அவள் மீது அவன் கொண்டிருந்த காதலால்தான் என்று சரித்திராசிரியர்கள் சொல்லுகிறார்கள்.

விஜயநகரைத் தோற்றுவித்த மன்னன் ஒருவன் தன் எல்லையோரத்திலிருந்த ஓர் ஏழைப் பெண்ணின் மீது கொண்ட காதலினால் அண்டை நாடான முஸ்லிம் மன்னருடன் தீராப் பகை வளர்த்துக் கொண்டு தன் நாட்டின் பகுதியையும் இழந்த பரிபவத்தைச் சரித்திர வாயிலாகக் காணும் போது, 'ஐயோ காதலே' என்று நம் கலங்கத்தான் வேண்டியிருக்கிறது.

டில்லியை அரசாண்ட அடிமை வம்சத்து அரசர்களில் ஒருவரான அல்டமிஷின் அருமை மகள் **ரஸியா**. தனக்குப் பின் சிங்காதனமேறும் தகுதி தம் புதல்விக்கே இருக்கிறதென்று எண்ணினார் அல்டமிஷ். வீரத்திலே, ராஜரீகத்திலே வல்லவளாக விளங்கினாள் இளவரசி ரஸியா. அது மட்டுமா? இணையற்ற அழகியும் கூட. தந்தைக்குப் பின் தானே நாட்டை ஆண்டாள். ஆரம்பத்திலே சில குழப்பங்கள் ஏற்படத்தான் செய்தன. 'தங்களை ஒரு பெண் ஆளுவதா?' என்று எண்ணிப் புரட்சி செய்தவர்களையெல்லாம் அடக்கி ஒடுக்கினாள். திறமையாக அரசாங்கத்தை நடத்தினாள். ஆனால் அவளும் பெண்தானே? ஆண்மகளைப்போல் குதிரை மீதேறி வாளேந்திப் போர்க்களத்திலே சாகஸங்கள் செய்தாலும், பருவமும் பெண்மையும் அவளிடம் தன் கைவரிசையைக் காட்டாமல் இருக்குமா? அவள் நம்பிக்கைக்குப் பாத்திரமானவனாக விளங்கினான் ஓர் ஆப்பிரிக்கத் தளபதி. அஞ்சா நெஞ்சம் படைத்த அவனிடம் 'தன் நெஞ்சைப் பறிகொடுத்துவிட்டாள் அழகி ரஸியா. குதிரைக்காரனான அவனிடம் அரசி கொண்ட காதல் உயர்குடிப் பிறந்த அரச குடும்பத்தாரிடையே மனக்' கசப்பை வளர்த்தது. அதன் பலன், புரட்சி, போர். முடிவிலே அழகி ரஸியா, ஆணை விடச் சிறப்பாக அரசோச்சிய அரசி ரஸியா, படுகொலை செய்யப்பட்டாள். இந்தப் பரிதாபம் அவள் கொண்ட காதலால் தானே?

'அழகி உனக்கா எனக்கா?' இப்படிப் பூசலிலே நாசமான அரசுகள் எத்தனையோ. அன்ஹில்வாரா அரச பரம்பரையின் அழகி அவள். **கிருஷ்ணகுமாரி** என்று பெயர். ராஜஸ்தானத்தின் நறுமலர் என்று வருணிக்கப்பட்ட வடிவழகி கிருஷ்ணகுமாரி. இவளைத் தன் மனைவியாக்கிக்கொள்ள **ஜெய்ப்பூரின் ஜகத்சிங்கும், மார்வாரின் மான்சிங்கும்** போட்டி போட்டனர். இருவருமோ பரம வைரிகள். தங்கள் வன்மத்தைத் தீர்த்துக் கொள்ள உதயபுரி ராணாவின் அழகு மகள் கிருஷ்ணகுமாரியைக் கருவியாக்கிக் கொண்டார்கள். ஒருத்தியை இருவருக்கு எப்படி மனைவியாக்கி வைப்பது? ஆகவே, மார்வார்க்காரனும் ஜெய்ப்பூர்க்காரனும் உதயபுரி மீது படை எடுத்துவந்தார்கள். காரணம் அழகி கிருஷ்ணகுமாரியின் மீது கொண்ட காதல். இதனால் ராஜஸ்தானத்திலே பெரும் உள்நாட்டுப் போரே மூண்டது. இருவர் பக்கத்திலும் பல சிற்றரசர்கள் கட்சி சேர்ந்து கொண்டனர். வெற்றிப் பெண் இங்கும் அங்குமாக விளை

---



"எனக்கும் சோஃபியாலாரனுக்கும் காதல் கல்யாணம் ஐம்பது சதவீதம் முடிந்த மாதிரிதான்."

"அதெப்படி?"

"நான் ஒப்புக் கொண்டாகி விட்டது; அவள் சம்மதம்தான் தேவை!"



''அதோ போகிறானே அவனுக்கு பாவம், காதலில் தோல்விதான் ஏற்பட்டது. அவன் காதலித்த பெண்ணையே கல்யாணம் செய்து கொண்டு விட்டான். பாவம்!'' -முரளி

---

யாடினான். அதன் பலன் பல உயிர்கள் சேதமாயின. அழகி யாருக்கு உரியவள் என்ற முடிவுக்கு யாராலுமே வரமுடியவில்லை. இந்த நிலையில் ஒரு பாதகன் இதிலே புகுந்தான். பதான் வகுப்பைச் சேர்ந்தவன். அமீர் கான் என்பது பெயர். சண்டையிட்டுக் கொள்ளும் ராஜபுத்திரர்களிடையே சமாதானம் செய்து வைப்பதாக நைச்சியம் பேசி அவர்கள் நன்மதிப்பைப் பெற்றுவிட்ட அந்த நயவஞ்சகன் கூறிய தீர்ப்பு என்ன தெரியுமா? அந்த அழகு மலரை யாரும் ஏற்கக் கூடாது. பெற்றவன் தன் கையாலேயே அத் தங்கச் சிலைக்கு விஷம் கொடுத்துக் கொன்றுவிட வேண்டும். எப்படி? ஆனால் காதலினால் மதிகெட்ட ராஜபுத்திரர்கள் இந்தக் கொடூரமான செய்கைக்கும் உடன்பட்டார்களே, அதுதான் பரிதாபம். காணக்கிடைக்காத அழகி கிருஷ்ணகுமாரி, தன் பொருட்டுப் பல உயிர்கள் மடிவதைக் காண விரும்பாமல் விஷக் கோப்பையைத் தானே வாங்கிக் குடித்தாள். அதன்பிறகாவது அமைதி ஏற்பட்டதா? அதுதான் இல்லை. அழகிக்காகப் போரிட்டுக் கொண்டவர்களை அந்நியன் அடிமைகளாக்கிக் கொண்டான். இது சரித்திரம் கூறும் உண்மை.

நானூறு ஆண்டுகளுக்கு முன்னால் தஞ்சையை நாயக்க மரபினர்கள் ஆண்டு வந்தார்கள். **விஜயராகவ நாயக்கர்** சிறந்த வீரர், பக்திமான், கலைஞர். மக்களின் மனங்கவர்ந்த மன்னர். இவருடைய காலத்திலே மதுரையையும் நாயக்கர்களே ஆண்டு வந்தார்கள். விஜயராகவ நாயக்கரின் காலத்தில் மதுரையை ஆண்டது முதலாம் சொக்கநாத நாயக்கர். பதினாறு வயதில் பட்டமேறிய **சொக்கநாதன்** சிறந்த வீரன். பல போர்க்களங்களைக் கண்டு தன் நாட்டைப் பெருக்கிக் கொண்டவன். தஞ்சைக்கும் மதுரைக்கும் இடையே பகை இருந்தது நெடுங்காலமாக. புகைந்து கொண்டிருந்த பகை பெரும் போராகவும் மூண்டதுண்டு. அதில் மதுரை நாயக்கரின் கை ஓங்கித் தஞ்சையம்பதி தாழ்ந்ததுண்டு. இந்த நிலையில் சொக்கநாதன், விஜராகவன் பேத்தியான **அச்சுதரங்கம்மாளைக்** காதலித்தான். அந்த அழகி தனக்கு மனைவியானால் தன் வீர வாழ்வு விறு கொள்ளும் என்று கனவு கண்டான். இது ஒருதலைப் பட்ட காதல். அச்சுதரங்கம்மாள் தன் தாத்தாவின் வாக்கைத் தெய்வ வாக்காக மதிப்பவள். அவர் விருப்பத்துக்கு மாறாக நடக்கத் துணியாதவள். விஜயராகவருக்கோ தம் விரோதி சொக்கப்பனுக்குப் பெண் கொடுக்க ருப்பமில்லை.

பெண் கொடுக்க மறுத்த விஜயராகவர் தன்னை அவமானப் படுத்தி விட்டதாக வெகுண்டெழுந்தான் சொக்கப்பன். மதுரையின் பெரும் படை தஞ்சையம்பதியை அழித்துத் தரைமட்டமாக்கக் கிளம்பியது. தளரவில்லை கிழவர். தோல்வி நிச்சயம் என்று தெரிந்தும் எதிர்க்காதிருக்க விரும்பவில்லை அந்தக் கிழட்டுச் சிங்கம். அரண்மனைப் பெண்டிரையெல்லாம் உவளகத்திலே வைத்தார். ஒரு முனையில் தீவைத்தால் உடனே எங்கும் பரவி விரைவில் நாசம் விளைவிக்கும் சுரங்க வெடிகளை உவளகத்தைச் சுற்றி விதைத்தார். வெளிக் கோட்டையைத் தகர்த்துக் கொண்டு அலை போல முன்னேறி வரும் மதுரைப் படைகளை எதிர்த்து நிற்க உள் கோட்டை வாயிலில் கையில் வாளேந்தி நின்றார்கள். யார்? விஜயராகவ நாயக்கர் மட்டுமா? அல்லது அவர் மகனும் கூடவா? அவர்களோடு இருபதே வயதான அச்சுத ரங்கம்மாளே கையில் வாளேந்தி நின்றாள். யாருக்காகப் படையெடுத்து வந்தானோ அவளே தன்னை எதிர்க்க வாளுடன் தயாராக நிற்பதைக் கண்ட சொக்கநாதனின் ஆண் ரத்தம் கொதித்தது. விஜயராகவ நாயக்கரின் குடும்பமே களப் போருக்குத் தயாராக நின்றது. வாளோடு வாட்கள் மோதின. அச்சுதரங்கம்மாள் காளியாகக் களத்திலே சாகஸம் புரிந்தாள். அவளது வாள் மின்னிய பக்கமெல்லாம் மதுரை நாயக்க வீரர்களின் தலைகள் உருண்டன. ஆரணங்கின் அற்புத வீரம் கண்டு திகைத்துப் போனான் சொக்கநாதன். ஆனாலும் அந்த அழகி அச்சுத ரங்கம்மாளை உயிருடன் அவனால் கைது செய்ய முடியவில்லை. தமது வீரர்கள் அனைவரையும் பலி கொடுத்த பின் தாங்களும் வீர சுவர்க்கம் அடைந்தனர், விஜய ராகவ நாயக்கரும் அவரது குடும்பத்தினரும். வாளினால் தன் மானத்தைக் காத்துக் கொண்டாள் அழகி அச்சுத ரங்கம்மாள். பகைவருக்கு வெற்றி கிட்டியதுமே விஜயராகவரின் கட்டளைப்படி உவளகத்துக்குத் தீவைக்கப் பட்டது. முறைப்படி அத்தனை வெடிகளும் கொக்கரித்து அரண்மனைப் பெண்டிர் அனைவரையும் பலிகொண்டது. போரிலே வெற்றி பெற்றும் காதலிலே தோல்வி கண்ட சொக்கநாதனைத் தஞ்சையரண்மனையில் பிணக் குவியல்கள்தான் வரவேற்றன.

காதலால் களங் கண்டவர்களில் ராஜபுத்திரர்களைத்தான் முதன்மையாகக் கொள்ள வேண்டும். **கூர்மா தேவி** என்ற அழகிக்காக சாது, கோமனன் என்ற வீரர்கள் மோதிக் கொண்டு அழிந்தது நெஞ்சை உருக்கும் வரலாற்று உண்மை. **கீனா தேவி** என்ற அழகியைக் காதலித்துக் கரம் பற்ற விரும்பினான் ஒரு முகலாயன். உற்றோரும் பெற்றோரும் மறுத்தனர். எதிர்த்துப் போரிட்டாலும் வெற்றி பெற முடியாது என்ற நிலையில் அந்த அழகியே அந்நியனை மணக்க முன் வந்தாள். அவர்களுக்குப் பிறந்தவன்தான் பின்னால் நாடே மெச்சும் வகையில் ஆட்சி புரிந்த **பிரோஸ் ஷா**! இந்தக் காதலால் நன்மையே பிறந்தது.

பல பெரும் போர்களுக்குப் பின்னாலே காதலே களமாக இருந்திருப்பதை உலக வரலாற்றிலே நிறையக் காணலாம். ஒவ்வொன்றுமே ஒவ்வொரு ரசமான கதை. சில விரசமான சம்பவங்களைக் கொண்டிருந்தாலும் மேனாட்டு வரலாற்றிலே சரித்திரத்தின் போக்கையே மாற்றிய காதல்கள் நிறைய உண்டு!

# நம்பகமான மருத்துவ சேவைக்கு பின்னின்று உதவுகிறது—பாரி

ஆன்ட்டிஸெப்டிக்குகள், உயிர்காக்கும் மருந்துகள், அறுவை சிகிச்சைக் கருவிகள்...பலவேறு நம்பகமான மருந்துகளையும் உடல்நல உபகரணங்களையும், நம் மக்களுக்கும்—மருத்துவ சேவை புரிவோருக்கும்—எளிதாகக் கிடைக்கச் செய்கிறது பாரி நிறுவனம்.

விற்பனைப் பிரதிநிதிகளாகப் பணியாற்றுவதின் மூலம்—பம்பாய் 'ஸயானமைட் இந்தியா'வின் ஒரு பிரிவான 'லெடர்லே' உற்பத்தி செய்யும் மருந்துகள் மற்றும் உடல் நலத் தயாரிப்புகள்; ரேணிகுண்டா 'ஸர்க்காட் இண்டஸ்ட்ரீஸ்' தயாரிக்கும் ஸர்ஜிக்கல் காட்டன் ட்ரெஸ்ஸிங் மற்றும் ஸானிட்டரி நாப்கின்கள்; கோழிக்கோடு 'கேரளா ஸோப்ஸ் & ஆயில்ஸ்' நிறுவனத்தின் வைட்டமின் எண்ணெய்கள்—இவற்றை தெற்கு மற்றும் கிழக்கு இந்தியாவெங்கிலும் அளிக்கிறது பாரி நிறுவனம்.

மேலும், அமெரிக்காவிலுள்ள 'கோப், இன்க்கார்ப்பொரேடட்' தயாரிக்கும் புகழ்பெற்ற செயற்கை சிரகங்கள் உள்பட, பல இன்றியமையாத அறுவைசிகிச்சை மற்றும்மருத்துவசாலை சாதனங்களை இந்தியாவில் தருவித்தும் அவற்றுக்கான சேவையளித்தும் வருகிறது பாரி நிறுவனம்.

மக்கள் வாழ்க்கையில் பல துறைகளிலும் உதவவேண்டும் என்ற இலட்சியத்துடன் இயங்கி வருகிறது பாரி நிறுவனம்—இதற்கு ஒரு சிறந்த உதாரணம், மருத்துவ சேவைத் துறையில் பாரி ஆற்றும் பணி.






**ஈ.ஐ.டி.-பாரி லிமிடெட்**
**1788 முதல்**
பார்மா டிவிஷன்
டேர் ஹவுஸ், மதராஸ் 600 001

Grant EID/P-2 Tam

# திரையிலே காதல்

கே. பாலசந்தர்



“கண்ணோடு கண் நோக்கின்'' அங்கு வாய்ச் சொற்களுக்கு வேலையில்லை என்பது இலக்கியத்திலே பிறக்கின்ற காதலுக்கு இலக்கணம். ஆனால் வெள்ளித் திரையிலே தோன்றுகின்ற காதலுக்கு வண்டி வண்டியாக வாய்ச் சொற்கள் தேவைப்படுகின்றதே. ஏன்? 'அத்தான்' என்று அடுக்கு மொழியிலே அவள் ஆரம்பிக்க 'கண்ணே' என்று பதிலுக்கு அவன் அவளை வர்ணிக்க, 'வாய்ச் சொற்கள் ஏதும் பயன் இல்லை' என்று சொன்னது போக, அவர்களது வர்ணனைகளும் காதல் பேச்சுக்களும் நமக்கு வேதனையையும் அலுப்பையும் ஏற்படுத்துகின்ற அளவுக்குக் காதல் சம்பாஷணை நீண்டு கொண்டே செல்வதை நாம் பார்த்திருக்கிறோம்.

'காதல்' என்கின்ற அந்த மென்மையான உணர்வுக்கு வார்த்தைகள் அதிகம் இருக்கக் கூடாது என்பது மட்டும் அல்ல. அதை ஒருவருக்கொருவர் உணர்த்திக் கொள்ளச் சரியான வார்த்தைகள் கிடைக்காமல் அவர்கள் தடுமாறுவதுதான் உண்மையான காதல் ஆழத்தின் அளவுகோல் என்றுகூடச் சொல்லலாம். ஆனால் வெள்ளித்திரையில் காட்டப்படுகின்ற காதல் காட்சிகள் வெறும் வார்த்தைகளோடு மட்டும் நிற்பதில்லை. பாடலாகவும் தொடங்கி விடுகிறது. பேசுவதற்கு வார்த்தைகள் கிடைக்காமல் தடுமாறுகின்ற நிலை மாறி மடை திறந்தாற் போல் அழகான வார்த்தைகள் கவிதை நயத்துடன், தாள வாத்தியங்களின் ஒத்துழைப்புடன் எதுகை மோனையுடன் பாடலாகப் பிறக்கிறது. ஆகவே திரையுலகக் காதலர்கள் அத்தனை பேருமே கவிஞர்கள் கவியரசுகள்! விநாடி நேரத்தில் கவிதை இயற்றும் திறன் எப்படித்தான் இந்தத் திரைப்படக் காதலர்களுக்கு உண்டாயிற்றோ, நாமறியோம்!





✱ நடிகர் திலகம்
✱ நிர்மால்யம் • ஆன்டனி
✱ நிர்மால்யம் • சுமித்ரா

காலம் காலமாக இது நிகழ்ந்து கொண்டிருக்கிறது! ஆனால் கதையிலே 'லாஜிக்' கேட்பவர்கள் காதல் பாடலுக்கு 'லாஜிக்' கேட்பதில்லை!

திரைப்படக் காதலுக்கு மக்கள் கொடுத்த 'லைசென்ஸ்' தான் பாடல்கள் என்று கொள்வதைத் தவிர வேறு ஒன்றும் சொல்வதற்கில்லை!

'இந்த நேரத்தில் யாராவது பாடுவார்களா?' என்று வேறு சில சந்தர்ப்பங்களில் வருகின்ற பாடல்களைப் பற்றிக் கேள்வி எழுப்புகின்ற ரசிகர்கள்கூடக் காதலர்கள் பாடும்பொழுது கேள்வி கேட்பதில்லை! தாளம் போடுகிறார்கள்! பாடல்கள் 'ஹிட்' ஆகிவிட்டால் கூடவே முணுமுணுத்துக் கொள்ளவும் செய்கிறார்கள். ஆகவே பாட்



டுப் பாடிக் காதல் புரிவது செயற்கை என்றால் அந்தச் செயற்கைக் காதலுக்குப் பெருமளவு வரவேற்புக் கொடுத்து ஆதரிப்பதுரசிகர்கள் தான் என்பதிலும் ஐயமில்லை. காதல் பாடல்களை மக்கள் விரும்பிப் படத்திலே ரசிக்கிறார்கள் என்கின்ற நிலையிலே, செயற்கைத் தன்மை எப்படி மேலும் மேலும் அதிகமாகிறது என்பதைப் பார்க்கலாம்.

நாயகியை இயற்கையோடு ஒப்பிட்டுக் கூறுகின்ற பாடல்களை இயற்கை எழில் சிந்துகின்ற இடங்களில் படமாக்க வேண்டிய சூழ்நிலை தன்னாலே உருவாகிறது. ஆகவேதான் சென்னையிலே இருக்கிற காதலர்கள் திடீரென்று காதல் காட்சியின் பொழுது மட்டும் கோடைக்கானல் மலைகளிலோ, காஷ்மீரத்து ஏரியிலோ காதல் புரிய ஆரம்பிக்கிறார்கள். காதலுக்கேற்ற பாடல் வேண்டும்! பாடலுக்கேற்ற இடம் மட்டும் வேண்டாமா ?



அங்குர் - ஷப்னா அஸ்மீ

ஆகவே பாடலைக் காஷ்மீரத்திலே பாடுகிறார்கள். பாடி முடித்துவிட்டுக் கைகோத்தபடி வரும் காதலர்கள் அடுத்த காட்சியில் மந்தைவெளி வீட்டுக்குள் நுழைகிறார்கள்!

ஆகவே திரைப்படங்களிலே பாடல்களை ஒப்புக் கொள்கிறவர்கள் 'ரியலிசம்' பற்றிப் பேசுவது அவ்வளவு சரியில்லை என்றுதான் படுகிறது.

இயற்கையான காதல் காட்சிகள் திரைப்படங்களிலே இடம் பெற மக்களின் ரசனை முதலில் பண்படவேண்டும். அதிக வசனங்கள் இல்லாத திரைப்படங்களை ரசிக்கும் தன்மை உயர வேண்டும். நரம்புகளை மட்டும் முறுக்கேற்றும் திரைப்படங்களின் ரசனையிலிருந்து, மெதுவாகச் செல்லும் பண்பட்ட திரைப்படங்களைப் பார்க்கும் பொறுமையும் அதற்கே உரித்தான ரசனையும் வளர வேண்டும். ஒரு சில மேம்பட்ட ரசிகர்களுக்கு மட்டும் இதுபோன்ற ரசனை இருந்தால் போதாது.

திரைப்படம் என்பது ஒரு சாராருக்கு மட்டுமல்ல. அத்தனை பேரையும் திருப்தி செய்ய வேண்டியதுதான் திரைப்படங்களின் கடமை; 'தீவார்'களையும் 'ஜன்ஜீர்'களையும் மிகப் பெரிய அளவில் வெற்றி பெறச் செய்த ரசிகப் பெருமக்கள், 'ரஜனிகந்தா'க்களையும் 'அங்குர்'களையும் மாபெரும் வெற்றிக்கு உள்ளாக்க வேண்டும். அப்படிப்பட்ட நிலை தமிழகத்திலே வருகின்ற நன்னாளில் காதல் காட்சிகளை ஏன் இயற்கையாக எடுக்க மாட்டேன் என்கிறீர்கள் என்ற கேள்வியை எழுப்புங்கள்.

இயற்கையாக இல்லாத காதல் காட்சிகளை மட்டுமல்ல, இயற்கையாக இல்லாத திரைப்படங்களையே அன்று நிராகரியுங்கள் என்று ரசிகப் பெருமக்களுக்கு ஒரு தாழ்வான வேண்டுகோள் விடுத்துக் கொள்கிறேன்.

எங்களுக்கு மட்டும் ஆசையாக இல்லையா, இயற்கையாகக் காட்சிகளை எடுக்க? மௌனமான காதல் காட்சிகள், விழிகளாலேயே காதல் பேசும் காட்சிகள்... ''இரும்புத் திரை''யில் நடிகர் திலகம் — வைஜயந்திமாலா நடித்த ஒரு காட்சி இன்னமும் பசுமையாக மனக் கண் முன் நிற்கிறதே !

சமீப காலத் திரைப்படங்களில் வந்த மிகவும் இயற்கையான, நான் ரசிக்கும் ஒரு காதல் காட்சி.... படம் — நிர்மால்யம்.

சுமித்ராவும் கதாநாயகனும் ஒரு பாறையின் மீது உட்கார்ந்து கொண்டு — தள்ளித் தள்ளி உட்கார்ந்து கொண்டுதான் - காதலிக்கிறார்கள். எப்படி? மௌனமாக! பாறையின் மீது இருக்கும் சிறு கற்களை விரலால் ஒருவர் மீது ஒருவர் சுண்டி அடித்துக் கொள்ளும் துடிப்பான, நாசூக்கான, அந்தக் காதல் காட்சியின் கவிதை நயத்துக்கு ஈடான டயலாகோ, பாடலோ இல்லையென்பது எனது தாழ்மையான அபிப்பிராயம்.

---

அடுத்த இதழில்...

ஊன்று கோல்!

போட்டிக் கதை

-நாகை.பம.ஜீவா-



சிரிப்புத் தீப மலர்!

தொகுப்பு: பாலாஜி



# புதுமையின் பொலிவுக்கு

# ஹமாம்

நாள்தோறும் ஹமாம் தேய்த்துக் குளியுங்கள். ஹமாம் தரும் நறு மணமுள்ள நுரை உங்கள் சருமத்தை சுத்தம் செய்வதுடன், புத்துணர்ச்சியையும் அளிக்கிறது. உங்கள் மேனிக்கு கவர்ச்சியான மெருகையும் ஊட்டுகிறது. நெடுங்காலம்...நீடித்திருக்கும் ஹமாம் டாய்லெட் சோப்பை உபயோகியுங்கள்.




**அதிக காலம் நீடித்துழைக்கும் டாய்லெட் சோப்**

டாடா
தயாரிப்பு

CMTH-14-152 TAM



# பொன்னியின் புதல்வர்

சுந்தா

## 57. தியாகபூமி

**சோதனையால் ஒரு சாதனை**
**சாதனையால் ஒரு சோதனை**

விளம்பர மொழியில், ஒன்றில் ஐந்து ''தியாக பூமி'' — இப்போது பலரும் விரும்பிப் படிக்கும் கல்கியின் நாவல்; முன்பு பல்லாயிரக் கணக்கான தமிழர்கள் ஆவலுடன் படித்த தொடர் கதை; அக்காலத்தில் நூதனமானதாய் இருந்த ஒரு முறையில் எழுதப்பட்ட திரைக் கதை; தமிழ் டாக்கித் துறையில் முன்னோடிகளில் ஒருவரான டைரக்டர் கே. ஸுப்ரமணியம் எடுத்த படம்; அதைச் சுற்றி வீசிய விவாதப் புயல்.

கல்கியின் சொந்த மதிப்பீட்டின்படி ''அலை ஓசை'' நாவல்தான் அவருடைய மிகச் சிறந்த நாவல். ''ஏறக்குறைய முப்பது ஆண்டுகளாகத் தமிழ்த் தாய்க்குப் பயபக்தியுடன் இயற்றி வந்திருக்கும் பணிகளுக்குள்ளே இதுவே தலைசிறந்தது'' என்று அந்த நாவலின் முன்னுரையில் அவர் கூறியிருக்கிறார். அத்தகைய அலைஓசையை முன்கூட்டியே அறிவித்த மணியோசை போன்றது ''தியாகபூமி''.

தொடர்கதை உத்தியைக் ''கள்வனின் காதலி''யில் நயமாகக் கையாண்டிருந்த கல்கி அதற்கு அடுத்த ''தியாக பூமி''யில் நன்றாகப் பக்குவம் செய்திருந்தார். 1939 புத்தாண்டு தினத்திலிருந்து ஆனந்தவிகடனில் இருபது இதழ்களில் தொடர்ந்த அக்கதையை, மூன்று லட்சம் தமிழர்கள் தொடர்ந்து படித்தார்கள். அவர்களுடைய ஆவலை, சென்னை நகரில் விகடன் விற்கும் கடைகளில் அவர்கள் காத்து நின்று, இடித்துப் புடைத்துக் கொண்டு புது இதழ்களை வாங்கியதில் காண முடிந்தது. அயலூர்களில் ஆனந்த விகடன் கட்டுகள் வந்திறங்கும் ரயில், பஸ் நிலையங்களில் எல்லாம் அதே விதமாய்ப் பார்க்க முடிந்தது. வீட்டுக்குப் போகும்வரை பொறுமை இல்லாமலோ, வீட்டுக்குப் போனால் போட்டா போட்டி உண்டாகும் என்பதாலோ, அங்கங்கே உட்கார்ந்தும், நின்றும் புது அத்தியாயங்களைப் படித்தவர்களும் பலர் உண்டு.

அந்தத் தொடர்கதை, ஒவ்வொரு இதழிலும் பதினறு பக்கங்கள் கொண்ட அலாதியான ஃபாரங்களில், தனியாக எடுத்து வைத்துக் கொள்ள வசதியாக வெளிவந்தது. அது ஒரு புதுமை. அதை விட அதிசயமானதொரு புதுமை அதன் கதை பாத்திரங்கள், கையால் வரைந்த சித்திரங்களில் அல்லாமல் ஃபோட்டோக்களில் காட்சி அளித்ததாகும்... தொடர் கதை அச்சானதற்குச் சற்று முன்னெட்டி, அது டாக்கியாய் எடுக்கப்பட்டதால் அதன் நிலைப் படங்களை அவ்வாறு வெளியிட முடிந்தது.

தொடர்கதை ஓடி முடிந்ததற்கு அடுத்த வாரத்திலேயே, (20—5—39 யன்று) அதன் திரைப்படம் பல ஊர்களில் ஓடத் தொடங்கியது. அந்த வாரத்திய விகடன் இதழில் தமது தொடர்கதையின்பால் தமிழ் மக்கள் அவ்வளவு ஆர்வம் காட்டியதற்குக் காரணம் என்ன என்பதைத் தாமே ஆராய்ந்து கல்கி எழுதியிருந்தார்:

> ''கதை அவ்வளவு அபாரம்'' என்று சொல்லி என்னை நானே ஏமாற்றிக் கொள்ள விரும்பவில்லை. இந்தக் கதை டாக்கியாக வரப் போகிறது என்பதும், அதில் தமிழ் மக்களின் உள்ளத்தைக் கவர்ந்த நடிகர்கள் நடிக்கப் போகிறார்கள் என்பதும், கதையைப் படிப்பதில் தமிழ்நாட்டார் காட்டிய ஆர்வத்துக்கு முக்கிய காரணமாகும். ஆதலே, கதை முக்கியம் அல்ல; டாக்கிதான் முக்கியம். கதையைப் படிக்கும்போதே பெரும்பாலான வாசகர்கள் அதைத் தங்கள் மனேபாவத்தின் மூலம் டாக்கியாகவே பார்த்து அனுபவித்து வந்திருப்பார்கள். கதையுடன் வெளியான படங்கள் அவர்களுடைய மனேபாவத்துக்கு உதவி செய்திருக்கும்.
>
> (ஆ. வி. 21-5-39)

முன்பு ''கள்வனின் காதலி''யையும் திரைப் படமாக எடுப்பதற்காகத்தான் கல்கி எழுதினர். ஆனல், அதை எழுதிய விதத்துக்கும் ''தியாகபூமி''யை எழுதிய விதத்துக்கும் அடிப்படையான வித்தியாசம் ஒன்று உண்டு.

அதைச் சொன்னால், "அப்படியா தியாகபூமியை எழுதினார்?" என்று வியப்புற்றுக் கேட்கத் தோன்றலாம். நாவல் வடிவமும் பாத்திரப் படைப்பும் தியாகபூமியில் சீராகவும் செம்மையாகவும் இருப்பதைக் காணுகையில், அந்த வியப்புக் கேள்வி சந்தேகக் கேள்வியாக மாறலாம். அவ்வித சந்தேகத்துக்கு இடம் இல்லாதபடி செய்ய, கல்கியின் வாக்குமூலமே இருக்கிறது:

இந்தக் கதை அமைப்பே கொஞ்சம் தலைகீழ்ப் பாடம்தான். சாதாரணமாக, ஒரு கதை எழுதுவதில் முதலில் சம்பவங்களைத் தீர்மானம் செய்து கொண்டு அப்புறம் பாத்திரங்களைச் சிருஷ்டி செய்வதுதான் வழக்கம். "தியாக பூமி"யில் அப்படியில்லை. கதாபாத்திரங்களை வைத்துக் கொண்டு சம்பவங்கள் கற்பனை செய்யப்பட்டன. ஸ்ரீ பாபநாசம் சிவன், ஸ்ரீமதி எஸ். டி. சுப்புலக்ஷ்மி, பேபி ஸரோஜா இவர்களுக்காகவே எழுதிய கதை. இவர்கள் முக்கிய பாத்திரங்களாய் வருமாறு கதையில் சம்பவங்களை அமைக்க வேண்டும். சம்பவங்கள் டாக்கிக்குப் பொருத்தமாயும், அதே சமயத்தில் இயற்கையாக நடக்கக் கூடியனவாகவும் இருக்க வேண்டும். நமது தற்கால சமூக வாழ்க்கையைப் பிரதிபலிக்க வேண்டும். கூடியவரையில் புதிதாக இருக்க வேண்டும். (உலகத்தில் எதுவுமே புதிதல்லவாகையால் "கூடிய வரையில்" என்று போட்டுக் கொண்டேன்.) எல்லாவற்றுக்கும் மேலாகக் கதையில் ஓர் இலட்சியம் இருக்க வேண்டும்.

(மேற்படி)

இதில் குறிப்பிட்ட மூவரில், பாபநாசம் சிவன் பொன்னி நாட்டில் பிறந்துவளர்ந்த இசைத்தமிழ்க் கலைஞர்; பக்திக் கனிகளாகக் கீர்த்தனைகள் பலவற்றை இயற்றியவர். வீட்டிலும் வீதியிலும், கோயில்களிலும் உள்ளம் உருகிப் பஜனை செய்து, கேட்போரைப் பரவசப்படுத்தியவர். அவருடைய தனித் தோற்றத்தையும் தனித்தன்மை வாய்ந்த பாட்டுக் குரலையும், டைரக்டர் சுப்பிரமணியம் அப்படியே பயன்படுத்திக் கொண்டு, அவரைக் குசேலராய் நடிக்க வைத்து, அவரைப் போல்தான் அந்தப் புராண கால கிருஷ்ண பக்தர் இருந்திருப்பார் என்று, படத்தைக் காண்போர் மெச்சும்படி செய்து, அவரை ஒரு திரை நட்சத்திரமாய் ஆக்கி யிருந்தார்.

சிவன் நடித்த "பக்த குசேலர்"தான் "முதன் முதலாகத் தமிழில் வந்த நல்ல டாக்கி" என்பது கல்கியின் மதிப்பீடு. அந்தப் படத்தில் கிருஷ்ணர் வேஷத்தில் தோன்றிய எஸ். டி. சுப்புலக்ஷ்மியை, "தமிழ் டாக்கி வானத்தில் முதன் முதலாக உதித்த நிஜ நட்சத்திரம்" என்று பாராட்டினார் கல்கி. ஏற்கனவே நாடகப் புகழுடன் விளங்கிய எஸ். டி. எஸ்ஸை, கே. சுப்பிரமணியம்தான், வெள்ளித் திரைப் புகழுடன் ஜொலிக்கச் செய்திருந்தார்.



அதே இயக்குனர் ஒளி வீசச் செய்த இன்னொரு நட்சத்திரம், பேபி சரோஜா—தமிழ் டாக்கியில் முதலாவது குழந்தை நட்சத்திரம். அழகு கொஞ்சும் அவ

★ "ஒரு தேசிய அற்புதத்தை வெகு அழகாகவும் பொருத்தமாகவும் சித்திரித்த" டைரக்டர் கே. சுப்பிரமணியம்.

★ "பாதி டாக்கியாவது நன்றாயிருக்கிறது என்று பேர்வாங்கிக் கொடுத்த" சாரு - பேபி சரோஜா.

★ "நெடுங்கரைப் பட்டிக்காட்டில் பிறந்த அப்பாவிப் பிராமணன்" சம்பு சாஸ்திரிகளாகப் பாபநாசம் சிவன்.

★ "தமிழ் டாக்கி வானத்தில் முதன்முதலாக உதித்த நிஜ நட்சத்திரம்" எஸ். டி. சுப்புலக்ஷ்மி.







காதல்! காதல்! காதல்' காதல் போயின்
சாதல்! சாதல்! சாதல்! -பாரதியார்

காதல் என்பது அழகிய கனவல்ல; காதல் என்பது கணநேரத்து உடலின்பமும் அல்ல; காதல் என்பது இரண்டு மனங்களின் சேர்க்கை. இரண்டு அபூர்ண மனிதர்களுக்கு ஒருவரை ஒருவர் பூர்ணமாக்கு வதற்காக ஒரு விசித்திரமான தவிப்பு உண்டா கிறதே, அதன் பெயர்தான் காதல். - காண்டேகர்

---

னுடையமுகம், அதிலே விதவித உணர்ச்சிகளைக் காட்ட வல்ல இயற்கையான திறமை, மதுரமான மழலைப் பேச்சு— இவ்வளவையும் ''பாலயோகினி'' என்ற டாக்கியில் டைரக்டர் சுப்பிரமணியம் கலைச் சிறப்புடன் எடுத்து வழங்கி, அக்காலத்து ஆங்கிலப் படங்களில் புகழொளி வீசிக் கொண்டிருந்த ஷெர்லி டெம்பிளுக்கு நிகராக அவளை ரசிகர்கள் கொண்டாடும்படி செய்திருந்தார்.

அந்த மூன்று நட்சத்திரங்களையும் அவரவர் தோற்றம், திறமைகளுக்கு ஏற்றபடி, எந்தெந்தக் கதாபாத்திரமாய்க் கல்கி ஜொலிக்கச் செய்தார் என்பது தியாகபூமி டாக்கியைப் பார்த்தவர்களுக்கும், அக்காலத்தில் தொடர் கதையைப் படித்தவர்களுக்கும் தெரியும். இக்கால வாசகர்களும் எளிதாகவே இனம் கண்டு கொள்ளலாம். தலைகீழ்ப் பாடமாய் இருந்த போதிலும், அப்படி இருந்ததனாலேயே, மூன்று தலைமுறைகளைச் சேர்ந்த அந்த நிஜ மாந்தரையும், கதை மாந்தரையும், அசலுக்கும் அச்சுக்கும் வித்தியாசம் தெரியாதபடி, வார்ப்பு வேலை செய்துவிட்டார் கல்கி — பேத்தி சாருவாகப் பேபி ஸரோஜா; தாயார் சாவித்திரியாக எஸ். டி. சுப்புலக்ஷ்மி; தாத்தா சம்பு சாஸ்திரியாகப் பாபநாசம் சிவன்.

''தியாகபூமி'' படப்பிடிப்பு, வண்டலூருக்கு அருகேயுள்ள ஒரு கிராமம், அடையாறு, சாந்தோம் கான்வெண்ட், இப்போது ஜெமினி ஸ்டுடியோ அமைந்துள்ள இடம் முதலிய இலக்குகளில் நடைபெற்றது. ஒவ்வொரு இடத்துக்கும் ஒவ்வொரு நாளும் கல்கி சென்று, தமது கதைக்குச் சரியாய்ப் படப்பிடிப்பு இருக்கிறதா என்று பார்வையிட்டார் என்றும், டைரக்டருக்கு யோசனைகள் சொல்லி உதவி செய்தார் என்றும், பலரும் பேசிக் கொண்டார்கள். அவ்விதமாய்ச் சில பத்திரிகைகளில் குறிப்புக்களும் வெளியாயின. ஆனால் அப்படி அல்ல என்று கல்கி மறுத்தார்.

தெரியாத விஷயங்களில் தலையிடும் வழக்கம் எனக்கு எப்போதும் கிடையாது; அந்த மாதிரி ஆசையும் இல்லை. படம் பிடிப்பது என்பது ஓர் அரிய பெரிய வித்தை. அதில் தேர்ச்சி பெறுவதற்கு எவ்வளவோ உழைப்பும் அநுபவமும் வேண்டும். எனக்கு உள்ள அநுபவமெல்லாம் கட்டின வீட்டுக்குப் பழுது சொல்லும் அநுபவம்தான். ஆகவே, டைரக்டர் சுப்பிரமணியத்தின் வேலையில் நான் போய்த் தலையிடுவது உசிதமாகாது; அதற்கு அவர் இடம் கொடுத்திருக்கவும் மாட்டார்.

'ஷூட்டிங்' நடந்து கொண்டிருந்த காலத்தில் நான் சில நாளைக்கு ஸ்டுடியோவுக்குப் போயிருந்தது உண்மைதான். அப்போது, கதையில் எங்கெங்கே டைரக்டர் மாறுதல் செய்கிறார் என்பதைக் கவனிக்க முடிந்தது. ''ஐயோ, மாற்றி விட்டாரா?'' என்று நேயர்கள் பலர் அலறுவது என் காதில் விழுகிறது. ஆமாம், மாற்றித்தான் இருக்கிறார்.

ஒரு கதையை எழுத்தில் எழுதுவதற்கும், அதை வாயால் சொல்வதற்கும், அதையே டாக்கித் திரையில் காட்டுவதற்கும், அமைப்பு முறையில் சில வித்தியாசங்கள் இருந்துதான் தீர வேண்டும். டைரக்டர் திரைக்காகச் செய்த மாறுதல்களைக் கவனித்து அவற்றில் சிலவற்றைக் கதையில் சேர்த்துக்கொள்ள முடிந்தது. வேறு சில மாறுதல்கள் திரைக்குத்தான் பொருத்தமாய் இருக்குமாதலால் அவற்றை விட்டுவிட நேர்ந்தது. (மேற்படி)

இதே கட்டுரையின் இறுதியில், படத்தைப் பார்க்கும் நேயர்கள் அது சுமாராய் இருக்கிறது என்றாவது சொல்லக் கூடும் எனத் தாம் எதிர்பார்ப்பதாகக் கல்கி கூறியிருந்தார். அப்படியே, பொதுமக்களில் ஒரு பகுதியினர் கருதினார்கள்; இன்னொரு பகுதியினர், படம் நன்றாய் இருப்பதாகவே மதிப்பிட்டார்கள். தொடர்கதையைப் படித்திருந்தவர்களில் சிலர், அதைப் போல் அவ்வளவு நன்றாகப் படம் இல்லையே என்று கொஞ்சம் ஏமாற்றம் அடைந்தார்கள். அவர்களும்கூடப் படத்தை மட்டம் எனக் கருதவில்லை.

இவர்களுக்கு நேர்மாறாகச் சென்னைப் பத்திரிகைகள் வெகுவாகப் படத்தைக் கண்டனம் செய்தன. ''பாரதமணி'', ''நவசக்தி'' நீங்கலாக, மற்றெல்லாப் பத்திரிகைகளும், ''பெரிய ஏமாற்றம்'', ''மகா மோசம்'' என்றெல்லாம் தலைப்புக் கட்டி விமர்சனம் வெளியிட்டன. அவற்றிலே, ''தினமணி'', ''சுதேசமித்திரன்'' ஆகிய இரண்டின் விமரிசனங்களும் மிகக்

கடுமையாய் இருந்தன. திறமை மிக்க கே. சுப்பிரமணியம் எடுத்த படம் அவ்வளவு மோசமாய்ப் போனதற்குக் காரணம் கல்கியின் கதைதான் என்பது அவற்றின் அனுமானம்.

முன்பு கல்கி, சில சினிமா விமரிசகர்கள் நடித்தும், சம்பந்தப்பட்டும் இருந்த ''ஸ்ரீ இராமாநுஜர்'' படத்தைப் பற்றி இப்படி எழுதியிருந்தார்: ''தமிழ்நாட்டில் உள்ள டாக்கி முதலாளிகள் சிலர் சேர்ந்து ஒரு பெரிய சதியாலோசனை செய்திருக்க வேண்டும். ... தமிழ்ப் பத்திரிகைகளில் வரும் டாக்கி விமரிசனங்களுக்கு மதிப்பே இல்லாமல் அடித்துவிட வேண்டும் என்றுதான், தமிழ் டாக்கி முதலாளிகள் இந்தச் சூழ்ச்சி செய்திருக்கவேண்டும்.''

இதையே, ''இராமாநுஜர்'' படத்தில் நடித்தவரான ஒரு விமரிசகர் கல்கி மீது திருப்பி விட்டார்: ''கல்கியின் கதைகளுக்கு ஜனங்களிடையே மதிப்பில்லாமல் செய்ய வேண்டும் என்று, படமெடுப்பவர்கள் சூழ்ச்சி செய்து, அவரை இந்தக் கதை எழுதச் சொல்லி இருக்கலாமோ...''

முன்பு அசன்தாசின் ''நந்தனார்'' பட விமரிசனத்தில், சில அஃறிணைப் பொருள்கள் மட்டுமே நன்றாக நடித்திருந்ததாகக் கல்கி கூறியிருந்தார். அந்தக் கூற்றையும் அதே விமரிசகர் ''தியாக பூமி'' படத்துக்கு ஏற்றிப் போலிப்பு செய்தார்: ''ஜில்லி என்ற நாய், ஆஸ்பத்திரியில் உள்ள கட்டில்கள், உமாராணியின் மோட்டார், ரயில் வண்டி முதலியனவும் திருப்திகரமாய் இருந்தன.''

இதே கிளிப்பிள்ளை முறை தொகுத்த இன்னொரு ரசிகரின் பட்டியலில், நாய்க்குட்டி, புயல் காற்று, வெள்ளம், யந்திரம், பத்துப் பாத்திரங்கள், பொம்மைக் குழந்தை முதலியன இடம் பெற்றிருந்தன.

இவ்வித விமரிசனங்களின் மூலம் தாம் அடைந்த அதிர்ச்சியையும் வேதனையையும், 4–6–39 விகடன் இதழில், ''தியாக பூமி — கதையும் டாக்கியும்'' என்ற கட்டுரையில் கல்கி வெளியிட்டார்.

காதல் மனத்தைப் புனிதமாக்கும்; இதயத்தை விரிவுபடுத்தும். அறிவே அதன் வாழிடம். காமத்தில் ஆழ்ந்து விடாது இறையன்புக்கு ஏறும் ஏணி அதுவே ஆகும். -மில்டன்

'உலக அறிவு' என்ற நூலிலிருந்து
தகவல்: எஸ். ராஜகோபாலன்



...விமரிசனங்களைப் படிக்கப் படிக்க ''இவ்வளவு மோசமான கதை தமிழில் இதுவரையில் வெளி வந்ததே கிடையாது'' என்று தோன்றி விட்டது. இதுவும் எனக்குப் பெருமை அளிப்பதுதான்; சந்தேகமில்லை... ஒன்று, ரொம்ப நல்ல டாக்கியைக் கொண்டு வருவதில் சம்பந்தப் பட்டிருக்க வேண்டும்; அது முடியாவிட்டால் மகா மோசமான டாக்கியிலாவது சம்பந்தம் இருக்க வேண்டும்.

இந்த இரண்டாவது அதிர்ஷ்டமாவது எனக்குக் கிடைத்திருக்கிறதே என்று நான் நிச்சயமாகச் சந்தோஷப்பட வேண்டியதுதான். ஆனால், விமரிசனங்களைப் படிக்கும்போது, தியாகபூமி கதாபாத்திரங்களின்மேல் எனக்கு உண்டாகும் இரக்கம்தான் மேற்படி சந்தோஷத்துக்குக் குறுக்கே நிற்கிறது.

பாவம்! சம்பு சாஸ்திரி! சாவித்திரி! இவர்களுடைய கஷ்டங்கள் இன்னும் முடிந்தபாடில்லை. துன்பங்கள் இன்னும் அவர்களைத் தொடர்கின்றன...

''சென்னையில் சம்பு சாஸ்திரி அலைந்தது தான் மிச்சம்; அவரையும் அவருடைய சங்கீதத்தையும் விரும்புவாரில்லை'' — இம்மாதிரி டாக்கித் திரையில் கொட்டை எழுத்தில் எழுதியிருக்கிறது...

எவ்வளவு உண்மையான வார்த்தை! தீர்க்க தரிசனம் போல் அல்லவா இருக்கிறது! சென்னையில் பெரிய மனுஷர்கள் அன்று சொன்னது போலவே இன்று பத்திரிகைக்காரர்கள் சொல்கிறார்களே! அவர் முகம் நன்றாயில்லையாம்! பார்க்கச் சகிக்கவில்லையாம்! பாட்டு கர்ண கடூரமாம்! கேட்கச் சகிக்கவில்லையாம். .!

சாவித்திரி! நீ அன்றும் அநாதை; இன்றும் அநாதைதான். அன்று நீ கைக் குழந்தையுடன் சென்னை வீதிகளில் அலைந்தாய். அப்போது உனக்கு உதவி செய்வோர் யாரும் இல்லை. எல்லாரும் உன்னை வெறுத்து ஒதுக்கினார்கள். இப்போது சென்னைப் பத்திரிகைக்காரர்கள் உன்னை வெறுத்து ஒதுக்குகிறார்கள்.

நீ பணக்காரியானது ரொம்ப அநியாயமாம். உன் அத்தையும் அத்திம்பேரும் எதற்காக உனக்குப் பணம் கொடுக்க வேண்டும் என்று கேட்கிறார்கள். அந்தப் பணம் மட்டும் வந்திராவிட்டால் உன் கதி என்ன ஆகியிருக்கும் என்று வினவுகிறார்கள். சாவித்திரி! சாவித்திரி! நீ பிறந்தேயிரா விட்டால் எவ்வளவு நன்றாய் இருந்திருக்கும்!

குழந்தை சாரு எப்படியும் அதிருஷ்டசாலிதான்! கதையிலும் அவளை எல்லாரும் விரும்பினார்கள். பத்திரிகைக்காரர்களிலும் எல்லோரும் அவளைப் புகழுகிறார்கள். சாரு! சாரு! நல்ல வேளையாய்த் ''தியாக பூமி''யின் மானத்தைக் காப்பாற்றினாயே அம்மா!



நமது வாழ்க்கை மிகக் குறைந்த கால அளவு உள்ளது. அதிலிருந்து காதலுக்குச் சில நாட்கள் தான் கிடைக்கின்றன. -நாகூர்

காதல் என்பது ஒரு ஜுரமாகவும் விவாகம் என்பது அதற்கு ஒரு மருந்தாகவும் எண்ணக் கூடாது. அவ்வாறு கொண்டால் விவாகம் முடிந்ததும் ஜுரம் தணிந்து போகும். -ராஜாஜி

எனது இதய வாசலில் 'வழியில்லை' என்று எழுதி வைத்தேன். காதல் உணர்வு களிப்புடன் வந்து நான் எங்கும் நுழைகிறேன் எனக் கூக்குரலிட்டது. - ஹெர்பர்ட் ஷிப்மன்

---

பாதி டாக்கியாவது நன்று யிருக்கிறது என்று பேர் வாங்கிக் கொடுத்தாயே! மொத்தம் மூன்று மணி நேரத்தில், பின் ஒன்றரை மணி நேரம் உன்னைச் சேர்ந்ததே அல்லவா? உயர் தர டாக்கியானது ஒன்றரை மணி நேரந் தானே இருக்க வேண்டும்? ஆகவே, நல்ல உயர்தர டாக்கி பார்க்க விரும்புகிறவர்கள், தியாகபூமியின் பிற்பகுதியை மட்டும் பார்த்துவிட்டுப் போகலாம் அல்லவா?

ஆம், பார்த்துவிட்டுப் போகலாம்.—வேறு கதையாய் இருந்தால் பார்த்துவிட்டுப் போக லாம். ஆனால் இந்தக் கதை இவ்வளவு அபத்தக் களஞ்சியமாக இருக்கும்போது, எப்படிச் சகித்துக் கொண்டு பார்க்க முடியும்? பூர்வ ஜன்மத்தில் செய்த பாபத்தினால் சினிமா விமர்சகர்களாகி, இந்த மகா கேவலமான கதையைக் கொண்ட டாக்கியைப் பார்க்க வேண்டி யிருக்கிறது!

படத்தை அல்லாமல் கதையைத் தாக்குவதை முக்கிய குறியாகக் கொண்ட அந்த விமரிசகர்கள் ''தியாக பூமி'' என்ற பெயருக்கு ஏற்ப அதில் எங்கே என்ன தியாகம் இருக்கிறது என்று கேட்டார்கள். ''கதையில் ஓர் இலட்சியம் இருக்க வேண்டும் என்று ஆசிரியர் சொன்னாரே, எவ்வளவோ தேடியும் அதைக் காண முடியவில் லையே!'' என்று அங்கலாய்த்தார்கள். கடைசிவரை சாவித்திரி கணவனை எதிர்த்து வழக்காடியது இந்துப் பெண் களின் மனோபாவத்துக்கு முரணானது என வாதித்தார்கள். கதாநாயகனை யும் கதாநாயகியையும் இறுதியில் சிறை யில் அடைபடச் செய்தது மிக மோச மான முடிவு என்று தீர்ப்புக் கூறி னார்கள்.

இவ்வாறே இன்னும் சில குறைகளை யும் விமரிசகர்கள் சுட்டிக்காட்டினார்கள். அவை எல்லாவற்றையும் கவனிப்பது சாத்தியம் அல்ல. அவர்கள் கூறிய வற்றுள் நியாயமான ஒன்றையும் அநி யாயமான ஒன்றையும் மாதிரிகளாய் எடுத்துக் கொண்டு, அவற்றுக்குக் கல்கி எப்படிச் சமாதானம் சொன்னார் என் பதைப் பார்ப்போம்.

சாவித்திரி என்னதான் வடநாட்டு நடை உடை பாவனைகளில் மாறி உமாராணியாகத் தோன்றினாலும், தந்தை சம்பு சாஸ்திரிக்கு அவளை அடை யாளம் கண்டுகொள்ள முடியாமல் போகுமா? நியாயமான குறை ஒன் றைச் சுட்டும் கேள்விதான் இது. ஒரு விமரிசகர், தம் தாயாரிடம் இதைப் பற்றிக் கேட்டதாயும், அதற்கு அந்த அம்மாள், ''ஒன்றரை வருஷத்தில் குழியில் போட்ட குழந்தை அறுபது வருஷம் கழித்து எழுந்து வந்தாலும் தெரிந்து கொள்வேன்'' என்று சொன் னதாயும் எழுதியிருந்தார். அதற்குக் கல்கி கொடுத்த பதில்:

அந்த அம்மாள் இருக்கும் திக்கு நோக்கி நமஸ்கரிக்கிறேன். ஆனால் சம்பு சாஸ்திரி தாயார் இல்லை என்று மட்டும் தெரிவிக்க வேண்டி யிருக்கிறது. இந்த விமர்சகரைப் போன்ற கெட்டிக்காரப் பிள்ளையைப் பெற் றெடுத்த தாயாரும் அவரல்ல. கேவலம், நெடுங்கரைப் பட்டிக்காட்டில் பிறந்த அப் பாவிப் பிராமணன். (மேற்படி)

சாதுர்யமாய் மடக்கிச் சொன்ன பதில்தான்; ஆனால் ஒப்புக்கொள்ளும் படியான சமாதானம் அல்ல. இதற்குச் சுமார் மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் ''மேனகா'' படம் பற்றிய விமரிசனத் தில் இவ்விதமான குறையைக் கல் கியே சுட்டிக் காட்டி யிருந்தார்:

கதையில் ஒரே ஓர் இடத்தில்தான் நமக்கு நம்பிக்கை உண்டாவது சிரமமாய் இருக் கிறது. மேனகா ஆஸ்பத்திரி நர்ஸ் வேஷத் தில் இருக்கும்போது அவளை, சிகிச்சையி லிருந்த கணவன் வராகசாமி மட்டுமின்றிப் புத்தித் தெளிவுடனிருந்த அவனுடைய நாத்தனார்மார் இருவரும்கூடக் கண்டுபிடிக்க முடியவில்லை என்பது அவ்வளவு ஒப்புக்கொள் ளத் தக்கதாய் இல்லை.

கதையில் படிக்கும்போது ஒருவாறு கற்பனை செய்து கொண்டு நம்பிவிட்டோம். ஆனால் டாக்கித் திரையில் பார்க்கும்போது அந்த நம்பிக்கை உண்டாகவில்லை.

(ஆ. வி. 22-12-35)

இனி, அநியாயமானதொரு குற்றச் சாட்டைப் பார்ப்போம்: படத்தின் ஒரு

கண்டதும் காதல் என்பதில் தவறில்லை. ஆனால் எதற்கும் இன்னொரு முறை காணுவது நல்லது!
ஷீமா - சரஸ்வதி பந்த



கட்டத்தில் ''பேசும் தெய்வம் காந்தி'' என்ற பாடலைச் சாவடிக் குப்பத்தில் சம்பு சாஸ்திரி தமது பேச்சினிடையே பாடுகையில், மகாத்மாவின் முகம் உரு வெளித் தோற்றமாய்க் காட்டப் படு கிறது. அந்தப் பகுதியை ஒரு விமர்சகர் பரிகசித்து எழுதி அதை வெட்டி எடுத்தே ஆகவேண்டும் என்றார்:

சம்பு சாஸ்திரி பிரசங்கம் செய்துகொண் டிருக்கும்போது, மகாத்மா காந்தி தலையை ஆட்டுவது போல் காட்டப் படுகிறது. காந்திஜி இந்தப் பிரசங்கத்துக்கு வந்திருந்தாரா? அல் லது காந்திஜி சம்பு சாஸ்திரிகளின் சிஷ்யர் களில் ஒருவராகி விட்டாரா? அல்லது காந்திஜி இந்தப் படத்தில் நடிக்க வந்தாரா? இந்தப் பாகத்தை நான் பலமாக ஆட்சே பிக்கிறேன். கோமாளித்தனமாக எழுது வதற்குக் கூட ஓர் எல்லை உண்டு.

இதற்குக் கல்கியின் பதில்:

கோமாளித்தனமாக எழுதுவதற்குக்கூட ஓர் எல்லை உண்டு; வாஸ்தவம்தான். ஆனால் மனமறிந்து பொய் எழுதுவதற்கு ஓர் எல்லை வேண்டாமா?... காந்திஜி சாவடிக் குப்பத் துக்கு வந்திருந்தார் என்றாவது சம்பு சாஸ் திரிகளின் பிரசங்கத்தைக் கேட்டுத் தலையை ஆட்டினார் என்றாவது, சம்பு சாஸ்திரிகளின் சிஷ்யர்களில் ஒருவ ராகி விட்டார் என்றாவது நான் கதையில் எழுதியிருக்கிறேனா? அப் படிக் 'கோமாளித்தனமாக' நான் எழுதி யிருக்கிறேன் என்றுதானே இவர் குறிப்பிடு கிறார். இந்தச் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகவாவது இவர் கதையைப் படித்தாரா? அல்லது படித்தவர்களிடமாவது கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கலாம் அல் லவா? அப்படி ஒன்றும் செய்யாமல் இந்தக் குற்றத்தை என் தலைமேல் போட இவர் முயற்சி செய்வது மனமறிந்து பொய்யாக எழுதுவது ஆகாதா?

உண்மையில் இது ஒரு குற்றமாக இருந் தால், என் தலையில் பொய்யாகப் போட்ட தைப் பற்றிக் குறை சொல்ல மாட்டேன். .... ஆனால் படத்தில் சிகரமான இடம் இது என்று நான் கருதுகிறபடியால்தான், அந்தப் பொறுப்பை நான் மறுக்கிறேன். டைரக்டர் சுப்பிரமண்யத்துக்கே முழுதும் சேர வேண் டிய இந்தப் பெருமையைப் பகிர்ந்துகொள்ள எனக்கு இஷ்டமில்லை.

''தியாக பூமி'' கதையில், இரண்டு மூன்று இடங்களில் அப்போது தேசத்தில் நடந்துவந்த சுதந்திர இயக்கத்தைப் பற்றி விவரிக்கப் பட்டிருக்கிறது. மகாத்மா காந்தியின் ஆத்ம சக்தியினால் நாடெங்கும் நடந்து வந்த அற் புதங்களைப் பற்றிச் சொல்லி யிருக்கிறது. இந்தத் தேசிய அற்புதத்தை வெகு அழகாக வும், பொருத்தமாகவும் டைரக்டர் இந்த இடத்தில் சித்திரித்திருக்கிறார். ''காந்தி மகான் தலையை அசைத்தார்; தேசத்தில் பெரிய புரட்சி ஏற்பட்டது'' என்பதை ஆச்சரியமான முறையில் காட்டியிருக்கிறார்.

(ஆ. வி. 11-6-39)

இந்தப் பகுதி, ''தியாகபூமி'' விவா தம் பற்றிய கல்கியின் இரண்டாவது நெடிய கட்டுரையில் உள்ளது. அந்தக் கட்டுரையின் விஷயங்களையும், மற்றப் பத்திரிகைகளின் விமரிசகர்கள் குத்திக் கிளறி ஆராய்ந்து, கேலியையும், வசை யையும் கலந்து வீசிவிட்டு ஒருவாறு ஓய்ந்தார்கள். தமது மூன்றாவது கட் டுரையில் கல்கி எல்லோருக்கும் இறுதி யாய்ப் பதில் கொடுத்துவிட்டு, அவ் வளவு கடுமையான விவாதப் புய லுக்குக் காரணமா யிருந்த படத்தைப் பற்றி, தமது நிதானமான மதிப் பீட்டை வெளியிட்டார்:

தமிழ் டாக்கிகள் எல்லாவற்றையும் விட எல்லா அம்சங்களிலும் ''தியாகபூமி'' சிறந் தது என்று நான் சொல்லவில்லை. ஆனால், இதுவரை வெளியான அநேக தமிழ் டாக்கி களுக்கும் ''தியாக பூமி''க்கும் இந்த வித்தி யாசம் உண்டு: மற்ற டாக்கிகள் பெரும் பாலும் 'பாமர' ஜனங்களை மகிழ்விப்பதற் கென்றே தயாரிக்கப்பட்டன. ஆனால் ''தியாகபூமி'' கல்வி அறிவும் கலை உணர்வும் படைத்தவர்களை உத்தேசித்தே எடுக்கப் பட்ட படம். ஆகையினால்தான் அதை 'உயர்தரப் படம்' என்று சொல்கிறேன்...

வருங்காலத்தில் ''தியாக பூமி''யை விட மேலான உயர்தர தமிழ் டாக்கிகள் தமிழ் நாட்டில் அநேகம் வெளிவர வேண்டும் என்று நான் பிரார்த்திக்கிறேன். அவற்றைப் பார்த்து மகிழ்வதற்கு நான் ஆவலுடன் காத்துக் கொண்டிருக்கிறேன்.

அத்தகைய உயர்தரத் தமிழ் டாக்கிகள் வருவதற்குத் ''தியாக பூமி'' வழிகாட்டி இருப்பதை எண்ணி இப்போதைக்கு மகிழ்ச்சி அடைகிறேன். (ஆ. வி. 18-6-39)

(தொடரும்)

# மலரும் பூவெனப் பிள்ளை வளர்ந்திடப் பலமான துணை—

# இன்க்ரிமின்*

இளமைப் பருவம்—பூவாய் மலரும் நாட்கள்—மலர்ந்து சிரித்து உங்கள் மனத்தை அள்ளி வளரும் பருவம்...இப் பருவத்தில் அவனுக்குக் கட்டாயம் தேவை—இன்க்ரிமின். பின்னர் பாருங்களேன் அவன் வளர்ச்சியை! பசித்துப் புசிப்பான்... உண்ணும் உணவெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக மாறும். நலம் தரும் வைட்டமின்கள், இரும்புச் சத்து, இவற்றோடு உங்கள் மகனின் வளர்ச்சிக்கு மிகமிக அத்தியாவசியமான அமினோ அமிலம், லைஸின் யாவும் நிறைந்தது இன்க்ரிமின்.



அடடே!
என்ன வளர்ச்சி!
உண்டு வளர்வான்
கண்டு மகிழ்வீர்!

## இன்க்ரிமின்* டானிக்

டிராப்ஸ்: 2 மாதங்கள் முதல் 2 வயது வரையில்
ஸிரப்: 14 வயது வரையில்

## உணவையெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக்கும் உங்கள் பிள்ளை பூவாய் மலர்ந்து சிரிக்கும்!

டாக்டர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர்—
Lederle ஸயனமிட் இந்தியா லிமிடெட்டின் ஒரு பிரிவு
*அமெரிக்கன் ஸயனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

## 5. பங்களூர் தளம்

மிஸஸ் பணிக்கரைத் தோளில் சாய்த்துக் கொண்டு, அவள் கையிலிருந்து நழுவிய போனை உரிய காலத்தில் பற்றிக் கொண்டு, ''ஹலோ!'' என்றார் டாக்டர்.

அப்போதும் எதிர்த் திசையில் குரல் கேட்டுக்கொண்டுதான் இருந்தது. ''அட என்னம்மா இது, ஒரேயடியா காபரா ஆயிட்டீங்க போலிருக்கே...என்ன ஆயிடுச்சு இப்ப'' என்று சிரித்தது குரல்.

''யார்? தாரிணி வீட்டு வேலைக்காரப் பொன்னுவா... என்ன விஷயம்?'' என்றார் டாக்டர்.

''ஒண்ணுமில்லீங்க...' அம்மா தங்கச்சியம்மா கிட்டப் பேசணும்னுச்சங்க... இருக்காங்களான்னு பாருடின்னுச்சங்க... கூப்டா, 'தாரிணியம்மா'ன்னு ஆரம்பிச்சதுமே அம்மா 'காபரா' ஆயிப்போயிடுச்சுங்க... ஏங்க அம்மா இப்படி நடுங்கிச் சாவுது?'' என்றாள் பொன்னு.

''சரி, உன் யஜமானியைக் கூப்பிடு.... தங்கச்சியம்மா இதோ தயாரா இருக்காங்க'' என்று சொல்லிவிட்டு, ''என்ன ராஜி! தாரிணி வீட்டிலேயிருந்து போன் னுலே இப்படிப் பயந்து நடுங்கறே; சரியான அசடு போ'' என்றார்.

'' ஆமாம். உங்களுக்கு என்ன — சொல்லிட்டீங்க. எனக்கு எப்போ போன் அடிச்சாலும் ஏதோ கெட்ட சேதி வரப்போகிறது என்று பயமாகவே இருக்கு.....'' என்றபோதுமிஸஸ் பணிக்கர் அழுதேவிட்டாள். ''எனக்கு இருக்கிற ஒரே சகோதரி அவள்.... அவளும் போய் விட்டால் அப்புறம் யார் இருக்கிறார்கள்?'' என்று சொல்லிக் கொண்டே ரிஸீவரை வாங்கிக் கொண்டாள்.

அதே சமயம், ''ஹலோ! ராஜம்!'' என்றது தாரிணியின் குரல் அவள் காதில்.

''ஹலோ, அக்கா! நீ அடிக்கடி என்னை ரொம்பப் பயமுறுத்தி விடுகிறாய்'' என்றாள் மிஸஸ் பணிக்கர். ''உன் வீட்டிலேயிருந்து 'கால்' என்றாலே பாதாதி கேசம் எனக்குப் பதறி விடுகிறது.''

''பயமுறுத்துகிறேனா? அசடே, என்ன சொல்கிறாய்?''

''ஆமாம், கையில் விஷத்தை வைத்துக் கொண்டு 'குடித்து விடுவேன்; குடித்து விடுவேன்' என்று பயமுறுத்திக் கொண்டிருக்கிறாயே — என்ன அர்த்தம் அதற்கு?''

''ஓ, அதைச் சொல்கிறாயா? — அசடே, அசடே'' என்று சிரித்தாள் தாரிணி தேவி. பிறகு, ''இதோ பார், ராஜம்! நன்றாகக்



சுவரில்

கேட்டுக்கொள். நான் அப்படியெல்லாம் திடீரென்று செத்துத் தொலைந்து போய்விடமாட்டேன். நான் எதற்காகத் துர்மரணமாகச் சாக வேண்டும்? அதுவும் பாரிபூர் மகாராணி மாதிரி கழிசடைகளை வெட்கமில்லாமல் உலகத்தில் உலாவிக் கொண்டிருக்கும்போது'' என்றாள்.

''மகாராணி வந்து விட்டாளா?''

''பெரிய மகாராணி! நீதான் மெச்சிக் கொள்ள வேண்டும். சினிமாக்காரி மாதிரி இருக்கிறாளாம். காலையிலேயே வந்தாயிற்றாம்... யாரோ இரண்டு தடிப் பயல்களைப் பெங்களூரில் சந்தித்தாளாம்..... கூட அழைத்துக் கொண்டு வந்துவிட்டாள்.... ஊரைச் சுற்றிக் காட்ட அழைத்துப் போயிருக்கிறாளாம்.''

''மகாராஜா—''

''மகாராஜா மட்டும் காலையில் வந்திருந்தார். பார்க்கவே இரக்கமாக இருக்கிறது. ஜோராக பில்லியர்ட்ஸ் ஆடுகிறார்.... பந்துகளைக் கரெக்டாகக் குழியில் தள்ளுகிறார்...

பெண்டாட்டியைச் சுற்றுகிற பந்துகளை மட்டும் குழி வெட்டிப் புதைக்கத் துப்பில்லே.''

''இன்று இரவு விருந்து உண்டோ, இல்லையோ?''

''கொடுக்கா விட்டால் நன்றாக இருக்குமா? நம் ராஜ வம்சத்துக்கே கெட்ட பெயராகி விடாதா?... அந்த ஊர்சுற்றியை அழைக்கவே எனக்குப் பிடிக்கவில்லே. அந்த மகாராஜாவுக்காகத்தான் சாப்பிடக் கூப்பிட்டேன்.... அதற்காகத்தான் உனக்கும் இப்போ போன் செய்தேன். நீயும் டாக்டரும் இன்றிரவு எங்களுடன் சாப்பிடுகிறீர்கள்... டாக்டர் கிட்டே சொல்லிடறயா?''

''ஆகட்டும்—''

''அப்புறம் இன்னொரு விஷயம். நீ இங்கே வரும்போதெல்லாம் உன்கிட்டே 'விஸ்டர், விஸ்டர்'னு இழையுமே ஒரு பொண்ணு... விமலான்னு....''

''ஆமாம்.''

''அது நேற்று இரவு யார் கூடவோ ஓடிப் போயிடுத்து.''

''என்ன, விமலா யார்கூடவோ ஓடிப் போயிட்டாளா?'' என்று கூவினாள் மிஸஸ் பணிக்கர். அதுவரையில் அவளையே பார்த்துக் கொண்டிருந்த மாலதி, 'விமலா' என்ற பெயரைக் கேட்டதும் நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

கும்...... ஒருத்தியே எதை என்றுதான் கவனிப்பது சொல்லு—''

''ஏன் மிஸ்டர் கோவிந்து எங்கே போனார்?''

''ஆமாம், அவர் ஓர் ஆள் என்று சேர்த்தியாக்கும்... ராத்திரி முழுக்க வீடு திரும்பவில்லே. காலையில்தான் வந்தார். பிலியர்ட்ஸ் மேடையைச் சரியாகப் போடவே அரை நாள் ஆயிற்று.... இப்போ ஏதோ ஹாண்ட் பாக்கைக் காணுமாம்... தேடு தேடென்று அவர் தேடிக் கொண்டிருக்கிறார்.''

''ஹாண்ட் பாக்கா?'' — மிஸஸ் பணிக்கர் கேட்டாள். மாலதி நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

''ஆமாம். மிக முக்கியமான பண்டம் ஏதோ அதில் இருக்கிறதாம்...''

''யாருடைய ஹாண்ட்பாக்?''

''அதைக் கேட்டால் கோபமே வருகிறது. யாருடையதாக இருந்தால் என்ன? தேடு என்றால் தேடு. முடியாவிட்டால் போய்ச் சேர்'' என்று கத்துகிறார்.

''ஐயோ, அக்கா!'' என்று வியப்புடன் கூவினாள் மிஸஸ் பணிக்கர். ''இவ்வளவு மக்காக இருக்கிறாயே... எனக்குப் புரிந்து விட்டது. நான் கொஞ்சம் துப்பறியும் நாவல்கள் படித்திருக்கிறேன். அவர் யாருடைய ஹாண்ட்பாக்கைத் தேடுகிறார் என்பது எனக்குப் புரிந்து விட்டது.''

''யாருடைய ஹாண்ட்பாக்?''

''எல்லாம் ஓடிப்போன அந்த விமலாவினுடையதுதான். அந்தப் பையில் கோவிந்துவின் 'சரக்கு' ஏதோ மாட்டிக் கொண்டிருக்கிறது. பெரும்பாலும் இந்த மாதிரி கேஸ்

# இரு விழிகள்

ரேகா சந்திரநாத்

''ஆமாம். ஓடுகிற வயதுதானே இது? பின்னே கிழவியாகப் போன பிறகா ஒருத்தி ஓடிப்போவாள்?'' என்று சிரித்தாள் தாரிணி தேவி. ''அது இப்படி ஏதாவது பண்ணும் என்று எனக்கு முன்பே தெரியும். அது நர்ஸிங் பண்ண வந்த மாதிரியே இருக்கவில்லே. துறுதுறுவென்று வீடு முழுக்க அலைந்தது. ஒரு நாள் பார் — என் கணவரின் அறைக் காவல்காரன் பார்த்துட்டான்...என்ன வேலே அந்த அறையிலே சொல்லு... அன்னிக்கே அடிச்சு விரட்டி விருப்பேன். கோவிந்து தான் வேண்டாம், இருந்து விட்டுப் போகட்டும் என்று தடுத்து விட்டார்.''

''எங்கே போனாள் என்று தெரிந்ததா?''—

''எங்கே போயிருப்பாள்? மோட்டார் சைக்கிளில் ஒரு பயல் நாலிலே இரண்டிலே வந்து தெருக் கோடியில் காத்திருப்பான்..... அவன் கூடத்தான் போயிருக்கும்.''

''யாரையுமே நம்ப முடியவில்லேயே இந்தக் காலத்திலே—'' என்றாள் மிஸஸ் பணிக்கர்.

''கொஞ்சம் சீக்கிரமாகவே வந்துவிடு... எனக்கு ரொம்ப உதவியா இருக்



களில் அவை காதல் கடிதங்களாகவே இருப்பது வழக்கம்.''

''ஸ்டுப்பிட்'' என்றாள் தாரிணி. ''என்ன உளறுகிறாய்?''

''நானா உளறுகிறேன். உன் கோவிந்துவைச் சாதாரணமாக நினைக்காதே. பெரிய ஆள். ஏன் அவர் விமலாவைக் காதலித்திருக்கக் கூடாது? ஏன் அவளுக்குக் காதல் கடிதங்கள் எழுதியிருக்கக் கூடாது? ஒரு முறை கோவிந்துவின் அறைக்குள் இருந்தாள் என்று வேறு சொன்னாயே—''

''அட, 'கடவுளே! அப்படியும் இருக்குமோ?...அதனால்தான் நான் துரத்தியடிக்க வேண்டும் என்றபோது, 'அதெல்லாம் வேண்டாம்; இருந்து விட்டுப் போகட்டும்' என்றாரோ?'' என்றாள் தாரிணி தேவி.

''அதுமட்டுமல்ல; நேற்றிரவு அவள் காணாமல் போயிருக்கிறாள். நேற்றிரவுதான் இவரும் வீட்டுக்கு வரவில்லை.... எப்படி விஷயம் பொருந்துகிறது பார்—'' என்று கண்களில் துப்பறிவு ஒளி மின்னக் கூறிவிட்டு மாலதியைப் பார்த்து வெற்றிப் புன்னகை புரிந்தாள் மிஸஸ் பணிக்கர்.

ஆனால் மாலதியின் முகம் ஒரேயடியாக வாடிவிட்டிருந்தது. அது என்ன புதுக் கதை! கோவிந்துவையாவது விமலா காதலிப்பதாவது? என்ன அசிங்கம்... இருக்கவே இருக்காது. ஆனால் கோவிந்து ஏன் விமலாவின் ஹாண்ட்பாக்கைத் தேட வேண்டும்? கடிதங்களுக்கா? அல்லது வேறு எதற்காகவா?

''ஆஹா! நான் பெரிய தப்பு செய்து விட்டேன். இந்த வீட்டில் எனக்கு எதிராக ஏதோ சதி நடக்கிறது... நான் அந்தக் கழுதையை வீட்டுக்குள் சேர்த்துக் கொண்டிருக்கவே கூடாது'' என்றாள் தாரிணி.

''பாவம், உனக்கு வெறுத்ததெல்லாம் பால்'' என்றாள் மிஸஸ் பணிக்கர்.

மாலதி மெதுவாக எழுந்திருப்பதைப் பார்த்துவிட்டு 'ஒன் மினிட்' என்று போனில் சொல்லிவிட்டு, 'மௌத் பீஸை'க் கையால் மூடிக்கொண்டு, ''என்ன கிளம்பி விட்டாயா? பூனைகள்....?'' என்றாள்.

''நீங்கள் குறிப்பிட்ட புத்தகத்தைப் படித்துவிட்டுப் பிறகு வருகிறேன், மேடம். தாங்க்ஸ்'' என்று கூறிவிட்டு வெளியே வந்தாள் மாலதி. அவள் மனம் பெரிதும் சோர்வடைந்திருந்தது. முக்கியமான துப்பு ஏதும் கிடைக்கவில்லை. கிடைக்கவில்லையா? விமலாவின் ஹாண்ட் பாக்கை இன்னொரு ஆசாமியும் தேடிக் கொண்டிருப்பது தெரிந்ததே!

**வெ**ராந்தாவில் நின்று அக்கம்பக்கம் நிதானமாகப் பார்த்து விட்டுப் பூட்டில் சாவியைத் திருப்பினார் கோவிந்து. 'கிளிக்' என்று தாள் திறந்து கொண்டது.

கதவை நகர்த்திக் கொண்டு உள்ளே சென்று உடனேயே மீண்டும் சாத்திவிட்டு 'ஸ்விச்'சைப் போட்டார். மங்கிய ஒளி எங்கும் பரவி ஒரு பாஷ் ஹோட்டல் அறை போல் காட்டியது. மேஜை முன் போய் உட்கார்ந்து கொண்டு நிமிர்ந்து பார்த்தார்.

எதிரே, சுவரில் உயரத்தில் இரண்டடி அகல நீளத்தில் அந்தக் கரிய இரப்பைகளுடன் கூடிய விழிகள் மோகனத்தைப் பொழிந்து கொண்டிருந்தன.

சௌந்தர்யத்துக்கெல்லாம் அதி தேவதையான ஒரு பெண்ணரசி தன் மற்ற எல்லா அங்கங்களையும் மூடி மறைத்துக் கொண்டு, எல்லையிலாக் கருணையை இரப்பைகள் வழியாக வழிய விட்டுக் கொண்டு, அதன் அடியில் காதலோடு பார்க்கிற மாதிரி இருந்தது.

புனிதமான ஒரு தெய்வ மகளின் முன் நிற்கும் பரம பக்தனைப் போல் அதன் முன் உருகிப்போய், அதையே நீர் மல்கும் கண்களுடன் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார் கோவிந்து.

''இனி உன்னைப் பார்ப்பேனா — நிர்மல், இந்த உலகத்தில்?'' என்று விம்மினார்.

திடீரென்று டெலிபோன் மணி அடித்தது. இமைகளை வெட்டிப் பொங்கிய கண்ணீரை உதறிவிட்டு ரிஸீவரை எடுத்தார். ''ஹலோ! கோவிந்து ஹியர்...''

''ஓ! காலையிலிருந்து டிரை பண்ணுகிறேன். கிடைக்க மாட்டேன் என்கிறீர்களே—'' என்று பெண் குரல் இழைந்தது.

''ஓ— தனமா?'' என்றார் கோவிந்து. ''என்ன தனம்? எங்கே இருந்து பேசுகிறாய்?''

''இப்பவா?... இப்ப வந்து... பாத் டப்பிலிருந்து பேசுகிறேன். நுரைக் கடலில் படுத்துக்கொண்டு பேசுகிறேன். என் நினைவாவது உங்களுக்கு இருக்கிறதா?''

''என்ன தனம் இப்படிக் கேட்கிறாய்?— ஞாபகமில்லாமலா நேற்று உனக்கு அந்தப் பரிசை அனுப்பினேன்?'' என்றார் கோவிந்து.

''ஆமாம், அதனால் எனக்கு என்ன உபயோகம்? என் அண்ணாவுக்குத்தான் லாபம். எனக்கு வேண்டியது நீங்கள்தான்.... எப்போது கொடுக்கப் போகிறீர்கள் அதை?''

''கொஞ்சம் பொறுத்துக் கொள் தனம். என்ன செய்வது? என்னைப் பிடித்த பீடை விலகி ஒழிய மாட்டேன் என்கிறதே!''

''எப்போது ஒழியும், எப்போது விடுதலை கிடைக்கும்?''

''இன்றைக்கே! இன்றிரவே!'' என்று பயங்கரமாகச் சிரித்தார் கோவிந்து. ''நாளைக் காலையில் அந்தச் சண்டாளி... உயிரோடு இருக்க மாட்டாள். ஆண்டவன் கொண்டு போய்விடுவார்.... ஹஹ்ஹஹ்ஹா''

அவருடைய பற்கள் நறநறவென்று சப்தித்த ஒலி தனத்துக்குப் போனில் தெளிவாகக் கேட்டது. அவள் உடம்பெல்லாம் பதறியது.

நடுங்கும் கைகளுடன் ரிஸீவரை மெதுவாக அதனிடத்தில் வைத்தாள். கைகள் இரண்டையும் மார்பில் கூப்பிக் கொண்டாள்.

''ஆண்டவனே! ஏதும் விபரீதமாகி விடாமல் நீதான் பார்த்துக் கொள்ள வேண்டும். என் கோவிந்துவைக் காப்பாற்றித் தரவேண்டும்'' என்று பிரார்த்தனை செய்தாள்.

சோப்பு நுரைகள் அவளைச் சுற்றி நாலாபுறமும் வண்ணக் குமிழ்க் கண்களைச் சிமிட்டிச் சிரித்தன. 'நீ அப்படியா பிரார்த்தனை பண்ணினாய்! என்னவெல்லாம் விபரீதங்கள் நிகழப் போகின்றன பார்' என்று அவை சொல்வது போலிருந்தது. (தொடரும்)



அரசாங்க அலுவலகங்களில், அங்கு பணி புரியும் ஊழியர்களுக்கு மேலதிகாரிகள் அனுப்பும் warning கடிதங்களைக் கேலியாக Love Letters என்று கூறுவார்கள். - வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி

உடலுக்கழகு
உடைகள்—அவை,
நாளெல்லாம்,
நாளுக்குநாள்
புதுமையுடன்
மிளிர்வது
அவசியம்.

அழகு?
யாருக்கு
வேண்டும்?

# நீடித்து நிற்கும் அழகான துணிகளுக்கு-டெபிலைஸ்ட் குறியைப் பார்த்து வாங்குங்கள்

'டெபிலைஸ்ட்' துணிகள், சுருக்கம் விழாதவை என நிருபணம் பெற்றவை. கசங்காது, எனவே நாளெல்லாம் நீடித்த புதுமைத் தோற்றம். உலகெங்கும் நம்பகம் பெற்ற 'டெபிலைஸ்ட்' சின்னம், நீங்கள் தேர்ந்தெடுக்கும் துணிகள் மீது இருக்கிறது.

இந்தியாவின் முன்னணியில் நிற்கும் மில்களான அரவிந்த், பாம்பே டையிங், பின்னி, டிஸிஎம், மஃபத்லால், ஸ்ரீ அம்பிகா, டாடா மற்றும் தாக்கர்ஸே ஆகிய மில்கள் 'டெபிலைஸ்ட்' குறியை உபயோகிக்கின்றன. நீங்கள் வாங்கும் ஒவ்வொரு மீட்டர் துணியிலும் 'TEBILIZED' சின்னம் இருக்கிறதா என்று பார்த்து வாங்குங்கள்.






**TEBILIZED**® துணிகள்
சுருக்கம் விழாதவை என
நிருபணம் பெற்றவை—
நீடித்த நல்ல தோற்றத்திற்கு.

டிரேட் மார்க் உரிமையாளர்கள்—
மேட்டூர் பியர்ட்செல் லிட்.
த.பெ. எண் 7, சென்னை 600 001

Sista's-MBT-284/75 K-Tam



Born : 25-3-1925 - Died : 29-8-1972

In fond and affectionate memory of
Smt. RENGAMONY
Beloved wife of S. Padmanabhan
Affectionate mother of
Jana and Kanna

1898
முதல் பிரசித்தி பெற்றது

பண்டிட் D. கோபாலாசார்லுவின்

ஜீவாம்ருதம்

ஆரோக்கியத்திற்கும்
பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிமிடெட் - சென்னை-17.




சுளுக்கு
உடனடியாக
குணமாகிறது!



AH/7573

# அமிர்தாஞ்சனம்

**தலைவலி, ஜலதோஷம் மற்றும் வலிகளுக்கு நம்பகமான நிவாரணி**

அமிர்தாஞ்சனம் சுளுக்கு, தசைவலி, உடல்வலி, தலைவலி, ஜலதோஷம் இவற்றிலிருந்து உடனடியாக குணமளிக்கிறது. அமிர்தாஞ்சனம் தடவியதும் வலி மறைகிறது. பாட்டில்கள், சிக்கனமான ஜாடிகள், மற்றும் மலிவு விலை டப்பாக்களிலும் கிடைக்கிறது.

அமிர்தாஞ்சனம் — பத்து மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்தது.

அமிர்தாஞ்சன் லிமிடெட்

# காலத்தால் அழியாத காதல் கடிதங்கள்!



நெப்போலியன் தன் காதலிக்கு எழுதிய கடிதம் :

அன்பே !

...நேற்றுப் போர்க்களத்தில் கடுமையான வேலை. கொஞ்சம்கூட ஓய்வில்லை. உணவோ, உறக்கமோ இன்றி ஒரு வாரமாக இருந்தும், நான் சுறுசுறுப்பாக வேலை செய்வது கண்டு எங்கள் குழுவினர் அனைவருமே ஆச்சரியப் பட்டனர். அது என்னால் எப்படிச் சாத்தியப்படுகிறது என்று எல்லோரும் திகைத்தனர். என்ன...? உனக்கு ஏதாவது புரிகிறதா?

நீ எழுதும் காதல் கடிதங்கள் என் சட்டைப் பையிலேயே இருப்பது வழக்கம். சோர்வு ஏற்படும்போது நான் அந்தக் கடிதங்களை எடுத்து ஒரு தடவை வாசிப்பேன். அவ்வளவுதான்! சோர்வு பறந்துவிடும். புத்துணர்ச்சி உடல் எல்லாம் பரவும். அப்புறம் பசியாவது, தாகமாவது ... ஒரு விஷயம்! என் துயரங்களைக் கண்டு நீ மனத்தை அலட்டிக்கொள்ளக் கூடாது (துன்பம் என் நண்பன்; அதை நான் வெறுக்க மாட்டேன். உலகத்தில் அபாரச் சாதனைகளைச் சாதிப்பதற்காகவே பிறந்த எனக்குத் துன்பம்தான் அரிய நண்பன். இன்பம் விரோதி. அது என்னைச் சோம்பேறி ஆக்கிவிடும். கோழையாக மாற்றிவிடும். அதை நான் வெறுக்கிறேன்...) இரவில் அதிக நேரம் கண் விழிக்காதே. உடம்பை ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்...

□ □ □

கார்ல்மார்க்ஸ் தம் காதலிக்கு எழுதிய கடிதம்:

அன்புள்ள ஜென்னி,

....ரைன்லாந்து கெஜட் பத்திரிகையின் ஆசிரியர் பதவியை ஏற்றுக் கொண்டேன். இப்படியொரு பதவியில் அமர்ந்து நிர்வாகம் செய்வதே எனக்குப் பிடிக்காத விஷயம். இப்படி ஒரு பிடிக்காத விஷயத்தில் நான் ஈடுபட்டதற்குக் காரணம் சாட்சாத் நீதான்.

என் பிரிவு உன்னை எவ்வளவு தூரம் வாட்டுகிறது என்று எனக்குத் தெரியும். வாழ்க்கை நடத்துவதற்கு ஏற்ற பொருளாதாரச் சூழ்நிலையை ஏற்படுத்திக் கொண்ட பிறகுதான் உன்னை மணப்பது என்பது என் தீர்மானம் என்று உனக்குத் தெரியும். உன்னை மணக்க வேண்டும் என்ற நினைவு பலமாக உந்தியதால் தான், ரைன்லாந்து கெஜட் பத்திரிகையின் ஆசிரியர் பொறுப்பை ஏற்றுக் கொண்டேன்.

...என் பொருட்டுப் பல இன்னல்களை அனுபவிக்கிறாய் என்று கேள்விப்பட்டேன். வருத்தப்படவில்லை. மகிழ்ச்சி அடைந்தேன். இதுதான் உண்மை வாழ்க்கை. பிறர் பரிகாசம் செய்கிறார்களே என்று அஞ்சாதே! உன் மனத்தை உறுதிப்படுத்திக் கொள்....

□ □ □

மாக்ஸிம் கார்க்கி தம் காதலிக்கு எழுதிய கடிதம்:

அன்புள்ள ஓல்கா,

....உனக்குக் கடிதம் எழுத வேண்டும் என்ற ஆசை என் மனத்தில் எழும்போது, கூடவே கொஞ்சம் வேதனையும் எழுகிறது. உனக்குப் படிக்கத் தெரியாது. என் அன்புக் கடிதத்தைப் புரிந்துகொள்ள நீ வேறு யாருடைய உதவியையாவது தேட வேண்டும். இந்தத் தடங்கலின் காரணமாக, என் இதய உணர்ச்சிகளையும் அடக்கிக் கடிதம் எழுத வேண்டியிருக்கிறது. உனக்கு இயற்கையாகவே பிறந்துள்ள அழகு மாதிரி கல்வியும் பிறந்திருக்கக் கூடாதா என என் மனம் ஏங்குகிறது. ஆனால் அதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. என்னிடம் கல்வி இருக்கிறது. உன்னிடம் அழகு இருக்கிறது. இரண்டும் ஒன்றுசேர்ந்தால் அதுவே ஓர் ஒப்பற்ற சக்தியாகத் திகழும். உன் நீல நிறக் கண்களில் வீசும் இன்ப ஒளி, கல்வியைவிட உயர்ந்தது என்பது என் கருத்து.....

ஆதாரம்: ஆர். ஷண்முகம் எழுதிய ''உலக உண்மைகள்''

தொகுத்து அனுப்பியவர்:

**தங்க குஞ்சிதபாதம்**

படங்கள் :

○ கார்ல்மார்க்ஸ்

○ மாக்ஸிம் கார்க்கி

○ நெப்போலியன்





# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி

Sobhagya GR 74-2-Tam.



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பநவீனமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைத்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்— தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)




## 21

**க**பூர் ரத்தன்லாலிடம் மோகினியின் மறைவைப் பற்றி விவரமாகக் கேட்டு அறிய விரும்பினர்.

''ஷம்மீன் நீ மோகினியைக் கடத்தி வைத்திருப்பதாக அல்லவா சொன்னுள்?''

''முழு விவரத்தையும் நான் அவனுக்குச் சொல்லவில்லே. அது கிடக்கட்டும். ஷம்மீன் எங்கே? ஓடிப்போய் விட்டாளா?''

''ஆமாம். நான் ஹோட்டலுக்குப் போன போது அறையைக் காலி செய்துகொண்டு போக அவள் ஆயத்தமாக இருந்தாள். எங்கே போகப் போகிறுள் என்று எனக்குச் சொல்லவில்லே.''

''டர்ட்டி பிட்ச். அவள் எங்கே ஓடியிருந்தாலும் அவளேக் கண்டுபிடிப்பது சிரமமல்ல.''

''அவளேத் துரத்திக் கொண்டு போனுயானுல் இதுவே உனக்கு ஆபத்தாக முடியும். சொல்வதைக் கேள். நடந்ததை யெல்லாம் மறந்துவிடப் பழகிக்கொள். நான் உங்கள் யாரையும் சம்பந்தப்படுத்தப் போவதில்லே. நான்தான் கொலே செய்ததாக ஒப்புக் கொள்ளப் போகிறேன். நீ சொல்வது உண்மையானுல் மோகினியை யார் கொன்றிருப்பார்கள்?''

''நான் நடந்ததை மறக்க வேண்டுமானுல் எனக்கு நிறையப் பணம் தேவை.''

''என்னிடம் இப்போது பணமாக இல்லே. 'செக்'காக இருக்கிறது. தரட்டுமா?''

'' 'செக்'கை வாங்கிக் கொள்ள நான் முட்டாளா?''

''அப்படியானுல் நாளேக் காலே என் ஆபீசுக்கு வா, தருகிறேன்.''

ரத்தன்லால் சிறிது நேரம் மௌனமாக இருந்தான்.

''சரி, 'செக்' கொடுங்கள்... நாலேந்து பாங்குகளில் 'செல்ஃப்' 'செக்'காகப் போட்டுக் கொடுங்கள்.''

ரத்தன்லால் 'செக்'குகளே வாங்கிக் கொண்டு போனுன்.

வீட்டுக்குப் போக வேண்டும்.

வீட்டில் யார் இருப்பார்கள்? மோகினியைக் கொன்றவர் யார்?

● ● ●

**வி**ஜயா வீட்டுக்குச் சென்றதும் கட்டிலில் படுத்துக் கொண்டாள். அவளுக்கு மிகவும் களேப்பாக இருந்தது. கபூரின் பிடிவாதம் அவளுக்கு எரிச்சலேத் தந்தது. இப்பொழுது என்ன செய்யப் போகிறுர்? மோகினியின் 'பாடி' கிடைத்து விட்டது. யார் கொன்றிருப்பார்கள்? ரத்தன்லால்தான், சந்தேகமில்லே. ஆனுல் கபூர் கேட்பது போல் அவளேக் கொல்வதால் அவனுக்கு என்ன லாபம்? கலபமாகப் பணம் கிடைப்பதை விட்டு,அவன் சிக்கலே அதிகரித்துக் கொள்ள விரும்புவானு? மோகினி ஒரு வன விலங்கு. அவளேத் தாக்க முற்பட்டிருக்கலாம். கோபத்தில் அவன் ஏன் கொன்றிருக்கக் கூடாது? பழியை ஏற்கக் கபூர் இருக்கவே இருக்கிறுர். ஆனுல் அவனே ஹோட்டலில் பார்த்தபோது,மோகினியைக் கொன்று விட்டு வந்தவனுகத் தோன்றவேயில்லே.

''என்னடி வந்தவுடனே படுத்துண்டுட்டே? உடம்பு சரியில்லேயா?''

அம்மா நின்று கொண்டிருந்தாள்.

''இல்லே... சும்மாத்தான்...''

''என்ன சும்மாத்தான்?'' என்று சொல்லிக் கொண்டே விஜயாவின் கழுத்தில் கையை வைத்துப் பார்த்தாள் அம்மா.

விஜயா எழுந்து உட்கார்ந்தாள்.

''சும்மா படுத்துண்டா எதுக்கு ரகளே பண்ணறே?''

''எனக்கென்னவோ நீ செய்யறது ஒண்ணும் பிடிக்கல்லே... அந்தக் குடும்பத்துச் சகவாசமே வேணும். நான் சொல்லறத்தைக் கேளு. மத்தியானம் வசந்தியோட அம்மா வந்திருந்தா. அவ ஆஃபீஸிலே ஒரு வேலே காலியா இருக்காம்.... முந்நூத்தம்பதோ, நானூறே தருவாளாம். பேசாமே நாளேக்குப் போய்ப் பாரு.... கபூரும் வேணும், குபூரும் வேணும்... அந்தப் பிள்ளேயைக் கல்யாணம் பண்ணிக்கிறேன்கிறியே, இது நடக்கக்கூடிய காரியமா?''




அம்மாவுக்கு முழு விவரமும் தெரியவில்லை. தெரிந்தால் அமர்க்களப்படுத்தி விடுவாள். ஆனால் இது தெரியாமலா இருக்கப் போகிறது?

அம்மாவை எப்படிச் சமாளிப்பது? கொலை நடந்த வீட்டில் நான் மருமகளாகப் போவதற்கு அம்மா நிச்சயம் சம்மதிக்கவே மாட்டாள். இதன் காரணமாக, உறவைத் துண்டித்துக் கொள்ள நான் தயாராக இருந்தால்? — காதலுக்காக எது வேண்டுமானாலும் செய்யலாம் என்பது அழகான கற்பனை. ஒரு குறிப்பிட்ட பாரம்பரியப் பிரக்ஞையை நினைவிலிருந்து என்றால் அப்படியே துடைத்தெறிந்து விட முடியுமா? ராகேஷுக்கும் எனக்கும் இடையே ஏற்பட்டுள்ள இந்தக் கவர்ச்சி காதலா? சூழ்நிலையின் காரணமாக எதேச்சையாக உண்டான இவ்வுணர்ச்சியைக் 'காதல்' என்று சொல்ல முடியுமா? 'காதல்' என்பது பொருளிழந்து தேய்ந்து போன வார்த்தை. கவிஞர்களும், சோம்பேறிகளும் (இரண்டு இனமும் ஒன்றுதானோ?) இச்சொல் ஏற்றித் தரும் மானசீகச் சுகத்தில் மயங்கி அலுக்கும்வரை இதைத் திரும்பச் சொல்லிச் சொல்லி அசிங்கப்படுத்திவிட்டார்கள். ராகேஷினிடத்தில் எனக்கு ஏற்பட்டுள்ள ஈடுபாடு சுயநலம் பற்றியதல்ல என்று சொல்ல முடியுமா? பார்க்கப் போனால், பொருளாதாரத் தற்காப்பின் காரணமாகத்தான் உண்டாகியிருக்க வேண்டும். அதே மாதிரி ஒரு மாறுதலை விரும்பித்தான் அவன் மனம் என்னை நாடியிருக்கிறது. இதை ஒரு சாசுவதமான, ஜன்மம்தோறும் தொடர்ந்து வரும் ஒரு பிணைப்பாகக்கொண்டு, என்னுடைய இப்பிறப்பின் இறந்த கால நினைவுகளை அழித்துவிட்டு, ஒரு புதிய வாழ்க்கையுடன் என்னைச் சம்பந்தப்படுத்திக்கொள்வது விவேகம்தானா?—

''என்னடி, வாயை மூடிண்டிருக்கே? சொல்லேன். என்ன பண்ணப் போறே?''

அப்பொழுது உமா உள்ளே வந்தாள். அவள் கையிலிருந்த புத்தகங்களை மேஜையின் மீது வைத்தாள்.

''உன் நண்பன் ராகேஷோட தங்கை யாரோ ஒரு பையனோட அவசரம் அவசரமாப் போயிண்டிருந்தா பார்த்தேன்.... நான் யாருன்னு அறிமுகப்படுத்திக் கொள்ளலாமான்னு நினைச்சேன். அப்புறம் ஏதோ தோணித்து, வேண்டாம்னு விட்டுட்டேன்'' என்றாள் உமா.

''பெரிய இடத்து விவகாரம் எப்படி இருக்கும்? அவ அவளோட போறது. இவ இவளோட போறது... அப்படித்தானே?'' என்றாள் அம்மா.

''அவசரமா போயிண்டிருந்தாளா? பார்த்தியா? எத்தனை மணிக்கு?'' என்று கேட்டாள் விஜயா.

''மத்தியானம்... அப்படி அவசரமா இல்லே... அவசரம் மாதிரி எனக்குப் பட்டது. சிகரெட் குடிச்சிண்டிருந்தா...''

''கூத்துத்தான் போ'' என்றாள் அம்மா.

''அவ சிகரெட் குடிச்சா உனக்கு என்ன? எதுக்காகச் சொல்லறே? உனக்குப் பொறுமையா இருந்ததா?''

''சீ, அவ சிகரெட் குடிச்சான்னு சொன்னு உனக்கு ஏன் கோபம் வரது?''

''நாத்தனாரோன்னோ, கோபந்தான் வரும்'' என்றாள் அம்மா.

விஜயா பதில் சொல்லவில்லை. கட்டிலிலிருந்து இறங்கிச் சமையலறையை நோக்கிப் போனாள். மத்தியதர பிராம்மணக் குடும்பத்து மனப்பான்மை இப்படித்தான் இருக்கும். வருத்தப்பட்டுப் பயனில்லை. இது எனக்கு எரிச்சல் ஊட்டுகின்றது. இதிலிருந்து தப்பிக் கொள்வதற்காகவாவது ராகேஷைத் திருமணம் செய்து கொள்வதில் தப்பில்லை. உமா அம்மாவைக் கிளப்பி விடுவதற்கென்று வேண்டுமென்றே இந்தத் தகவலைச் சொல்லியிருக்கிறாள். அஞ்சலி அவசர அவசரமாகப் போனது உண்மையானால் அவளுக்கும் மோகினியைப் பற்றிய விவரம் தெரிந்திருக்குமோ? யார் சொல்லியிருப்பார்கள்? எஸ்.. நினைவுக்கு வருகிறது. கபூர் அப்பொழுது போனில் கேட்டார், 'அஞ்சலி அங்கு இருக்கிறாளா?' என்று. அவள் காலேஜுக்கு போன் பண்ணி யார் சொல்லியிருப்பார்கள்? ராகேஷாக இருக்கலாம். அப்படியானால் குடும்பத்து அங்கத்தினர்கள் அனைவருக்கும் தெரிந்திருக்க வேண்டும். கபூர் என்னையும் அழைத்துக்கொண்டு போவாரென்று எதிர்பார்த்தேன்.... ஷம்மீனைப் பார்த்துப் பணம் கொடுத்துவிட்டு வந்தவர் என்னை ஏன் அழைத்துக் கொண்டு போக வில்லை? அவர் தாம் மோகினியைக் கொன்றதாக ஒப்புக் கொள்ளப் போகின்றார். அதற்கு நான் இடைஞ்சலாக இருப்பேன் என்று இருக்கலாம். தம்மால் செய்ய முடியாததைச் செய்து காட்டியதாக ஒப்புக் கொள்வதில் தான் தம் வாழ்க்கை இலட்சியத்தின் கொடுமுடி இருப்பதாக அவர் நினைக்கிறாரா? அவருக்கு நான் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற வேண்டுமென்றால், எனக்குத் தெரிந்த விவரங்களைச் சொல்லாமல் நான் சும்மா இருக்க வேண்டும். இது சரியா? சமூகத்தைச் சேர்ந்தவள் என்ற முறையில் எனக்குப் பொறுப்பில்லையா? இது ஓர் அறக் கோட்பாட்டுப் பிரச்னை. இதைப் பற்றிய உண்மைகள் வேறு வழியாக வெளிப்படுமானால், நான் சும்மா இருந்தது குற்றமாகும். அப்பொழுது நான் எல்லாவற்றையும் சொல்லியாக வேண்டும். தர்மசங்கடமான நிலைமை என்பது இதுதான்:

''என் பேரிலே கோபமா விஜயா? நான் வேணும்னு அப்படிச் சொல்லலே'' என்று கூறிக்கொண்டே வந்தாள் உமா.

''என்ன கோபம்?''

''நான் காப்பி போடறேன். நீ போய் ஓய்வு எடுத்துக்கோ.''

''அம்மா மாதிரி உனக்கும் நான் ராகேஷைக் கல்யாணம் பண்ணிக்கிறது பிடிக்கலியா?''

உமா பதில் சொல்லவில்லை. புட்டிப் பாலை எடுத்து ஒரு பாத்திரத்தில் கொட்டி காஸ் அடுப்பின் இன்னொரு பக்கத்தில் வைத்தாள்.

''சொல்லேன், பிடிக்கலியா?''

''அஞ்சலியைக் கண்டா காலேஜ்லே யாருக்கும் பிடிக்காது.''

''ஏன்?''

''ரொம்பத் திமிர் பிடிச்சவள்னு பேரு. நிறைய 'பாய் ஃப்ரெண்ட்ஸ்'. எல்லாரும் பணக்காரப் பசங்க. அவா உலகமே தனின்னு எனக்குத் தோணறது.''

''அஞ்சலி எப்படி இருந்தால் உனக்கு என்ன? ராகேஷைக் கண்டா உனக்குப் பிடிக்கலியா?''

''எனக்குப் பிடிச்சா என்ன, பிடிக்காட்டா என்ன? உனக்குப் பிடிச்சிருந்தா சரி...''

''இந்த மாதிரி விட்டேத்தியாப் பேசாதே. அவனைக் கண்டா உனக்கு ஏன் பிடிக்கலே?''

''அவனுக்கு உன்னைப் பிடிக்கறதுன்னு நிச்சயமாச் சொல்ல முடியுமா? ஏதோ நீ நன்னா இருக்கே, கெட்டிக்காரின்னு ஒரு 'டெம்ப்ரரி' ஈடுபாடா இருந்ததுன்னா?—பணக்காரப் பையன்களைப் பத்தி என்ன சொல்ல முடியும்? அம்மாவும் இதுக்குத்தான் பயப்படறா... அஞ்சலியோட அம்மாவுக்கும் நல்ல பேர் இல்லேன்னுதான் நினைக்கிறேன்.''

''அம்மாவுக்கு நல்ல பேர் இல்லேன்னா, பிள்ளை நல்லவனா இருக்கக் கூடாதா?''





ஆபீஸ் மானேஜரிடம் 'ப்ளேபாய்' ஜூனியர் சொன்னார்:
"அடுத்த மாதத்திலிருந்து எனக்குச் சம்பளமே வேண்டாம் மாமனாரே!"

"அதைப் பத்தி எனக்குத் தெரியாது."

உமா பாலைக் கீழே இறக்கி வைத்தாள்.

"டிக்காக்ஷன் இறங்கிடுத்தா பாரு?" என்றாள் உமா.

"இறங்கிண்டிருக்கு."

"எனக்கு இந்த மாதிரி ஒரு நிலைமை ஏற்பட்டதுன்னா அம்மா சொல்றபடிதான் நான் கேட்பேன். வாழ்க்கையிலே அம்மா எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கான்னு உனக்குத் தெரிஞ்சதுதானே? கல்யாணம் பண்ணிண்டு நான் என் வழியைப் பார்த்துண்டு போக முடியுமா? இல்லாட்டா எல்லோரையும் கூட்டிண்டு கல்யாணம் பண்ணிக்கிறவன் ஆத்துக்குப் போறதுங்கிறது நடக்கிற காரியமா?"

"நீங்க எல்லோரும் என்னோட வர்றதிலே எனக்கு ஆட்சேபனை இல்லே..."

"நம்ம ஜாதிக்காரன் ஆத்துக்கே எல்லாரும் போறதுங்கறது நன்னாயிருக்காது. அதுவும் ஒரு பஞ்சாபி வீட்டுக்குப் போறதுன்னா.. அம்மாவாலே வர முடியுமா? ஓய் ஃபீ யூ டாக் ரப்பிஷ்?" என்றாள் உமா.

உமாவை ஏறிட்டு நோக்கினாள் விஜயா. இதைப் பற்றி உமாவுக்கு இப்படியொரு தீவிர அபிப்பிராயம் இருக்கக் கூடுமென்று அவள் எதிர்பார்க்கவில்லை. உமா அவள் பார்வையைச் சகிக்காமல், ஃபில்டரைத் தட்டிக் கொண்டிருந்தாள்.

"நீ கல்யாணமே பண்ணிக் கொள்ளப் போறதில்லையா?" என்று கேட்டாள் விஜயா.

"இல்லே..."

"அம்மா, தனக்காகத் தன் பெண்ணுக கல்யாணம் பண்ணிக்காமெ வாழ்க்கையை வீணடிக்கிறதை விரும்புவான்னு நினைக்கிறியா?"

"அம்மா கல்யாணம் பண்ணிண்டு வீணடிச்சிக்கலையா? அந்த மாதிரி நான் கல்யாணம் பண்ணிக்காமே வீணடிக்கிறதிலே என்ன தப்பு? — ஒரு குடும்பத்தை 'ஸ்பாயில்' பண்ண ஒரு அப்பா இல்லாட்டா ஒரு அம்மா; இப்படித்தானே நாம பார்க்கிற குடும்பமெல்லாம் இருக்கு? அப்படியிருக்கச்சே எதுக்காகக் கல்யாணம் பண்ணிண்டு அவஸ்தைப் படணும்?"

"என்ன சொல்றே நீ?"

"நம்ம குடும்பத்துக்கு நம்ம அப்பா இருந்தா...உன் ஃப்ரெண்ட் ராகேஷ் குடும்பத்துக்கு அவனோட அம்மா... ஒருவேளை இதுதான் உங்க ரெண்டு பேருக்குமுள்ள பொருத்தமோ?"

உமா இப்படியெல்லாம் பேச எங்கே கற்றுக்கொண்டாள்? அவளுக்குள் ஒரு 'சினிக்' ஒளிந்து கொண்டிருப்பது தனக்கு இதுவரை தெரியாமல் போய்விட்டதே! ஒருவேளை அவள் சொல்வதுபோல் இதுதான் எனக்கும் ராகேஷுக்கும் உள்ள பொருத்தமோ? இப்படிப் பேசி என் 'குற்ற மனப்பான்மையை'த் தூண்டவேண்டுமென்று இவள் நினைக்கிறாளா? 'ஓட்டை விழுந்த கப்பலை விட்டு ஓடிவிட வேண்டுமென்று நீ நினைக்கிறாய்?' என்பது தானே அவள் பேசுவதன் அர்த்தம்? நான் செய்யப் போவது நியாயந்தானா?

உமா கொடுத்த காப்பியை வாங்கிக் கொண்டு விஜயா முதல் அறைக்கு வந்தாள். அம்மா அரிசியில் கல் பொறுக்கிக் கொண்டிருந்தாள்.

"அவனோட ஆம்படையா திரும்பி வந்துட்டாளா? ஏதோ சண்டை போட்டுண்டு போனான்னியே?" என்று கேட்டாள் அம்மா.

"தெரியாது."

"அந்தப் பிள்ளை இனிமே இங்கே வர மாட்டான் இல்லியா? அம்மாவோட ராஜியாயிடுத்தா?"

"அதுவும் எனக்குத் தெரியாது."

"அவா எக்கேடு கெட்டுப் போகட்டும். நான் சொல்றதை நீ கேளு. நீ இனிமே அங்கே வேலைக்குப் போக வேணும். ஒரு நாள் அவனைக் கூட்டிண்டு வந்து கூத்தடிச்சது போறும் எனக்கு. சுத்துப்பட்டவா என்ன பேசறா தெரியுமா? எனக்கு அவமானமா இருக்கு. 'அந்தப் பிள்ளை அந்நியன் இல்லே. எங்காத்து மாப்பிள்ளையா வரப்போறவன்'னு எந்த மூஞ்சியோடடி நான் சொல்லுவேன்? பஞ்சாபியான்னு கேக்கறா, வேறு என்ன வேணும் எனக்கு?"

உமா அம்மாவுக்குக் காப்பியைக் கொண்டு வந்து அவள் அருகில் வைத்தாள்.

"நீ இன்னிக்குப் பஞ்சாபி, நாளைக்கு இவ ஒரு கிறிஸ்துவன்னு அழைச்சுண்டு வந்து, 'அம்மா நமஸ்காரம் பண்றேன்'னு இது எங்கேதான் போய் முடியப் போறது. சொல்லு... உங்கப்பாவோட இருந்து கஷ்டப்பட்டது போறாதுன்னு, இது வேறயா?"

"நான் சத்தியமா அப்படிச் சொல்ல மாட்டேன், நான் கல்யாணமே பண்ணிக்கப் போறதில்லே" என்றாள் உமா.

"இவளும் அப்படித்தான் சொல்லிண்டிருந்தா. ஒரு ஆத்துக்குப் போய் வேலை பாருன்னு சொன்னதே தப்பு... அப்போ வேறே வழியில்லே. சரின்னுட்டேன். இது இப்படி வினையா முடியும்னு யார் கண்டா?" என்றாள் அம்மா.

"சொன்னதையே ஏம்மா திருப்பித் திருப்பிச் சொல்லிண்டிருக்கே? நான் அவரைக் கல்யாணம் பண்ணிக்கப் போறதே உங்களுக்காகத்தான்... நான் வேறே இடத்துக்கு வேலைக்குப் போய் முந்நூத்தம்பது ரூபா சம்பாத்தியத்திலே இந்தக் குடும்பம் நடக்கும்னு நீ நினைக்கிறியா?"

"நீ கல்யாணம் பண்ணிண்டு உன் ஹஸ்பெண்ட் போடற பிச்சையிலேதான் இந்தக் குடும்பம் நடக்கணுமா? நான் ஒருநாளும் சம்மதிக்க மாட்டேன். எனக்கும் சம்பாதிக்கத் தெரியும்" என்றாள் உமா. (தொடரும்)

"ஏன் சேகர்! என் அப்பாவிடம் வந்து என்னைக் கல்யாணம் செய்து தரும்படி கேட்க வேண்டியதுதானே?"

"கேட்கலாம், ஆனால் சரியென்று சொல்லி விடுவாரோ என்று கவலையாயிருக்கிறது!"

- கே. வி. எம்.






எங்கள் தகப்பனார் வள்ளியூர்

V. R. வெங்கட்டராமய்யர் அவர்களின்

**ஷஷ்டியப்த பூர்த்தி விழா**

24-7-75 அன்று சென்னையில் விமரிசை யாகக் கொண்டாடப்பட்டது.

V.V. ரங்கநாதன்
V.V. கணேசன், B. Sc.,B.G.L.
V.V. சுப்பிரமணியன், M. Sc.
லக்ஷ்மி ரகுநாதன்

சிறந்த ஆயுர்வேத மருந்துகளுக்கும், வைத்தியத்திற்கும்

# லலிதா பார்மஸி

## கும்பகோணம்

எமது பிரதம டாக்டர் வி. ஆர். லக்ஷ்மிகாந்த சர்மா அவர்கள் எமது சென்னை பிராஞ்சுகளுக்கு, கீழ்க்கண்ட தேதிகளில் விஜயம் செய்து வைத்திய ஆலோசனை அளிப்பார்கள்.

**1. 2-9 75**
**60-B, கச்சேரி ரோடு,**
**மைலாப்பூர், சென்னை-600004**
போன்: 73007

**2. 3-9-75**
**நெ. 6, ரெங்கனாதன் தெரு,**
**தி. நகர், சென்னை - 600017**
போன்: 441454

வைத்திய ஆலோசனை நேரம்:
காலை 8 to 11, மாலை 4 to 7

**குறிப்பு:** எமது டாக்டர் செப்டம்பர் மாதம் சென்னையில் மேற்கண்ட எமது பிராஞ்சுகளில் ஒவ்வொரு நாள்தான் தங்கி வைத்திய ஆலோசனை அளிப்பார்.

# *HURRAY!!!*

STANDARD TV





# the conqueror comes to tamilnadu

After capturing Amritsar, Bombay, Delhi & Poona, the much longed for TV is entering the Madras Metropolis - to conquer most of your pleasant evenings.

Standard TV! - combines tomorrow's TV technology today with all the convenient features- Vivid picture clarity. Excellent sound reproduction. Lower power consumption. Longer life Superb finish.

Guarantee & after sales service.
Available in 3 attractive models-
* Sartaj.
* Sanjeev.
* Sangam.

Book your set today.

STANDARD TV

India's Largest TV Group.

*Sole Distributors for Tamilnadu :-*

**SUDARSAN TRADING CO LTD.,**
16/1, Whites Road, Madras-14

ARIES





## சினிமாக் கதை: 7

# மூன்று சந்திப்புகள்

ரா. விழிநாதன்

முதல் சந்திப்பு

"என்ன அப்படிப் பார்க்கிறீர்கள், விழிபிதுங்க?'' தார்ஜீலிங்கின் வனப்புமிகு சூழலிலே வனப்பில் மிக்க ரமா கேட்டாள்.

''உன் விரிந்த விழிகள் விழுங்கிவிடுவது போல் என்னை ஏன் பார்க்கின்றன என்று பார்க்கிறேன்!'' என்றான் கட்டிளங் காளை இந்திரஜீத்.

அது முதல் நாள்.

மறு நாள்...? ''காதல் என்றால் என்ன?'' குழந்தைத்தனமாக ஒரு கேள்வியை உதிர்த்தாள் அவள்.

அவன் அவளது இதயப் பகுதியிலே பார்வையை ஓடவிட்டு, ''என் பதிலைக் கேட்டதும் உன் விழிகள் தாழ்ந்து பதிந்தனவே, அந்த இடம் நினைவிருக்கிறதா?'' என்று கேட்டான். அவளது விழிகள் அவனது இதயப் பகுதியை மேய்ந்தன. ''அங்கு தோன்றும் தூய உணர்வுக்குப் பெயர்தான் காதல்!'' அவனது விளக்கம் அவளது உள்ளத்திலே, அந்தக் குளுகுளுச் சூழலிலும் ஒரு கதகதப்பையும், கிளுகிளுப்பையும் ஊட்டியது.

மறு நாள், மறு நாள் என்று நாள் தவறாமல் வளர்ந்தது சந்திப்பு. ஒரு நாளைக்கு ஒரு பொழுதாகிலும் அவனைப் பார்க்காவிட்டால் அவளுக்கு அன்றையப் பொழுது பொழுதாகவே தோன்றுவதில்லை. அவனுக்கு...? பொழுதே போவதில்லை!

அன்று அவனைச் சந்தித்துவிட்டுத் திரும்பியதும் திரும்பாததும் அவளுக்கு ஃபோன் வந்தது. ''உன்னிடம் ஒன்று கூற மறந்துவிட்டேன். உன்னோடு இருக்கும்பொழுது எனக்கு இந்த உலகமே மறந்துவிடுகிறது'' என்றான் அவன்.

''உங்களைப் பிரிந்தாலும் எனக்கு உலகம் மறந்துவிடுகிறதே! சட்டென்று சொல்வதை மறக்காமல் சொல்லுங்கள்!'' என்றாள் அவள்.

''நாளைக்கு நாம் சந்திக்கப் போகும் இடம் கோயிலடி. அங்கு நம் காதல் கோயிலுக்கு அடிக்கல் நாட்டுவோம்! அப்புறம்...''

அப்புறம் என்ன? அவள் வானத்தில் பறந்தாள்!

"இதோ பாருங்கள்! உங்கள் பெண்ணுக்கு வயசாகிக்கிட்டிருக்கு. சட்டுப்புட்டுன்னு கல்யாணத்தை முடியுங்கள்!''

''அட, இன்னிக்கு மழைதான். உனக்குக் கூட அல்லவா பொறுப்பு தோணியிருக்கு!—ஆமாம், இப்பவே என்ன அவசரம் குழந்தைக்கு!''

''குழந்தையாம் குழந்தை! குதிராட்டமா நிக்கிறு. பேசாமல் இருந்தால் நாலு பேர் நாலு சொல்ல மாட்டாங்களா?''

''நாலு பேர் என்ன, நீயேதான் சொல்லியே! கண்ணுக்கு லட்சணமா நல்ல பையனாகப் பார்த்துப் பண்ணிடுவோம்!''

பெற்றோரின் பேச்சைக் கேட்டுக்கொண்டே வந்த ரமாவின் கண்களுக்குள்ளே இந்திர ஜீத் நின்றான். அவளும் இதயம் படபடக்க நின்றாள்.

''பிள்ளையெல்லாம் நான் பார்த்து வச்சிருக்கேன். என் அண்ணனுக்கே கல்யாணம் செய்து கொடுத்துவிடுவோம்!''

''என்ன? உன் அண்ணனுக்கா? இரண்டு குழந்தைகள் பெற்றவனுக்கு இரண்டாந் தாரமாகவா?'' ரமாவின் தந்தைக்கு நிலைக் குத்தலிட்டாற் போலிருந்தது.

''ஏன், கொடுத்தால் என்னவாம்? நீங்கள் என்னைப் பண்ணிக்கலே? உங்களைக் காட்டிலும் அவன் இரண்டு வயது சின்னவன்! தெரிஞ்சுக்குங்க!'' — சித்தியானதால் அவள் செந்நாகப் படமெடுத்தாள்.

ரமாவுக்கு இந்த நாகம் தன்னைத் தீண்டாமல் விடாது என்பது தெரிந்து போய் விட்டது. இந்திரஜீத்தின் துணை கொண்டு இதனை வெல்ல வேண்டும் என்ற முடிவுக்கு வந்தாள். குறித்த நேரத்துக்காகக் காத்திருந்து காத்திருந்து கோயிலடிக்குப் போனாள்.

எதிர்பார்த்த இந்திரஜீத் வரவில்லை. அவனுக்குப் பதிலாக ஓர் ஆள் வந்தான், கடிதத்துடன்!

''அன்புள்ள ரமாவுக்கு,

திடுதிப்பென்று தந்தி வந்து விட்டது. அப்பாவுக்கு அபாயம் என்று! அதனால் உடனடியாக நான் ஊருக்குப் போகிறேன். உன்னைக் கண்டு விடைபெற முடியாதது குறித்து வருந்துகிறேன். மேலே கொடுத்துள்ள முகவரியோடு தொடர்பு கொள்ளவும். நம் நெஞ்சக் காதல் என்றென்றும் அழியாதது. இது உறுதி!''

ரமா கடிதத்தைப் படித்து முடிப்பதற்கும் எதிர்பாராத மழை வருவதற்கும் சரியாக இருந்தது. அது அவர்கள் காதலை அழித்ததோ, இல்லையோ! இந்திரஜீத் கொடுத்திருந்த முகவரியை அழித்து விட்டது!

''போட்டிருக்கலாம்தான்! ஆனால் அன்றைக்கே விதி மழையாக வந்து உங்கள் முகவரியை அழித்து விட்டதே! வேறு வழி தோன்றாமல் போகவேதான் நான் இந்த முடிவுக்கு வரும்படியாயிற்று! — ஆமாம், நீங்கள் இங்கே எங்கே வந்தீர்கள்?''

அஜீத், தன் தொழிலுக்குத் தேவையான இயந்திரங்கள் வாங்கித் தருவதாகக் கூறி, ஆட்டக்காரி ஒருத்தியின் வீட்டுக்கு அழைத்துச் சென்று மயக்கி, தான் கடன் வாங்கி வைத்திருந்த பத்தாயிரம் ரூபாயையும் எப்படிப் பறித்துக் கொண்டான் என்பதை விளக்கி அதைத் திருப்பிப் பெற வந்திருப்பதாகச் சொன்னான் இந்திரஜீத்.

''யானை வாயில் போனது எங்கேயாவது திரும்ப வருமா? விட்டுத் தள்ளுங்கள்! என் நகைகளை எப்படியாவது பறித்துக் கொள்ள வேண்டும் என்பதற்காக என்னைத் தினமும் நரக வேதனைக்குள்ளாக்குகிறார். அவருடைய அல்யாக்குதச் செயல்களுக்கு அது பயன்படக்கூடாது என்பதற்காக இன்றுவரை நான் அவற்றைக் காப்பாற்றி வருகிறேன். அவற்றை விற்றால் என் கணவர் உங்களிடம் பறித்துக்கொண்ட தொகைக்குக் குறையாமல் கிடைக்கும். உங்கள் தொழிலுக்கு அதைப் பயன்படுத்திக் கொண்டு நலமே வாழுங்கள்!'' என்றாள் ரமா.



அந்த நேரம் பார்த்து அஜீத் வீட்டுக்குள் நுழைந்தான். ரமா தன் நகைகளைத் தராமற்போன ஆத்திரத்தில், இருவருக்கும் முடி போட்டு ஏசினான். ரமாவின் நடத்தைக்குக் களங்கம் கற்பித்து, 'இனி இந்த வீட்டில் நுழைந்தால் உன் உயிர் உனக்கு இல்லை! என்று கூறி, அவள் கூந்தலைப் பிடித்து இழுத்து வெளியே தள்ளிக் கதவைத் தாளிட்டுக்கொண்டான்.

''இந்தக் கிராதகன் சொன்னால் சொன்னபடி உன்னைக் கொலையே செய்தாலும் செய்து விடுவான். அதனால் பேசாமல் என் வீட்டுக்கு வந்துவிடு! என் தாயார் உன்னைத் தன் பெண் போல் பார்த்துக் கொள்வாள்!'' என்றான் இந்திரஜீத். தன் விதியைத் தானே அமைத்துக்கொள்வதாக அவள் எத்தனை கூறியும் அவன் கேட்கவில்லை.

ரமாவைப் பார்த்ததுமே இந்திரஜீத்தின் தாயின் கண்கள் அவளை எடைபோட்டுவிட்டன. பலன், மறுநாள் பொழுது புலர்வதற்கு முன்பாக, ரமா கருமம் தொலையும் பூமியான வாராணசிக்கு வண்டி ஏற்றப்பட்டிருந்தாள்.

இதை அறிந்த இந்திரஜீத், ''அம்மா! அவளை நீ உன் பெண் போலப் பார்த்துக் கொள்வாய் என்று அழைத்து வந்தேனே! இப்படி விரட்டியடித்து விட்டாயே!'' என்று நொந்து போய்க் கேட்டான்.

''மகளாக மதித்துத்தான் அவளை அனுப்பி வைத்தேன். அவள் வயிற்றில் வளரும்

## இரண்டாம் சந்திப்பு

'குடிகாரப் பயல்! எப்படி மோசம் செய்து விட்டான்? சின்னத் தொழிற்சாலை ஆரம்பிக்கலாம் என்ற ஆசையில் சேட்டிடம் கடன் வாங்கிய பத்தாயிரம் ரூபாயையும் அப்படியே அபேஸ் செய்து விட்டானே! அவனைப் பிடித்து உலுக்கி அந்தப் பத்தாயிரம் ரூபாயையும் திரும்பப் பெற்றேயாக வேண்டும்' என்று உறுதி பூண்டு அஜீத்தின் வீட்டுக்குச் சென்ற இந்திரஜீத்தை வாசற்கதவு திறந்து வரவேற்றாள் ரமா - அவன் ஆருயிர்க் காதலி!

''ரமா, நீ... இங்கே.... எங்கே...?'' திக்கித் திணறினான் இந்திரஜீத்.

''விதி!''

''என்ன சொல்கிறாய் நீ?''

''விதி வலிது என்கிறேன். என் சித்தி என்னை இரண்டாந்தாரமாகத் தன் அண்ணன் தலையில் கட்டப் பார்த்தாள். அதை விரும்பாத நான் அகலுக்குப் பயந்து அடுப்பில் விழுந்த கதையாக இந்த அஜீத்தை மணந்து கொண்டு இங்கு வந்துவிட்டேன்!''

''எனக்கு ஒரு கடிதம் போட்டிருக்கக் கூடாதா?''

கருவைப் பற்றி நாளை ஊருக்குத் தெரிந்தால் அதன் வாயில் எப்படியெல்லாம் புகுந்து புறப்பட வேண்டியிருக்கும்! — உனக்கும் வயதாகிக் கொண்டு வருகிறது என்பது எனக்குத் தெரியாமல் இல்லை!'' என்று இரு பொருள்பட அவன் பேசவே அவன் முழுவாகத் துடித்து விட்டான். 'ரமாவையும் தன்னையும் சேர்த்துத் தப்புக் கணக்குப் போடுவதா?' என்ற எண்ணத்தில் வாய் அடைத்துப் போய் விட்டான். சில நாட்களில் தாயின் சொல் செயலாக முகிழ்க்கவே, கமலா அந்தக் குடும்பத்துக்கு மருமகளாக வந்து சேர்ந்தாள்.

## மூன்றும் சந்திப்பு

''ரமா!''

டில்லிக்குத் தொழில் சம்பந்தமாக வந்திருந்த இந்திரஜீத் அந்த ஹோட்டலில் ரமாவை அந்தக் கோலத்தில் கண்டு திகைத்து விட்டான்.

''யார், ரமா? நான் ரோஸி!'' என்று அவள் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டாள்.

''வேண்டாம் இந்த வீண் நாடகம். இந்த இழிநிலைக்கு நீ வரக் காரணம்?''

''விதி!''

''விதியின் மேல் பழியைச் சுமத்தாதே! நீ மட்டும் உறுதியாக இருந்தால் இந்தக் 'கால் கேர்ல்' வாழ்க்கைக்கு வந்திருப்பாயா?'' சீறினான் இந்திரஜீத்.

''நான் மட்டும் மனம் வைத்து உறுதியாக இருந்தால் போதுமா? இந்த உலகம் என்னைச் சும்மா விட்டு வைக்கவில்லையே!'' உலகத்தைக் கசந்து கொண்டாள் ரமா.

''என் தாயின் தவற்றுக்கு நான் மன்னிப்புக் கோருகிறேன். ஒரு வகையில் பார்க்கப் போனால் அவனுடைய தவறும்தானே?''

''அவரவர் நோக்கில் அந்தந்தச் சூழலில் செய்தது எப்படித் தவறாக முடியும்? செய்த வரையில் சரி!''

''உன் வயிற்றில் வளர்ந்த குழந்தை என்ன வாயிற்று?''

''வளருகிறது, வசதியானதொரு இல்லத்தில். இந்த ஈனத் தொழிலில் இறங்கியஎனக்கு அதன் தாயாக என்னைச் சொல்லிக் கொள்ள நாவில்லை. உங்கள் மீதுள்ள அசைக்க முடியாத நம்பிக்கையினால் உங்கள் பெயரை அதற்குத் தந்தையாகச் சூட்டியிருக்கிறேன்! தவறாகக் கொள்ள மாட்டீர்களே!'' என்று கேட்டாள் ரமா.

''நல்ல காரியம் செய்தாய் நீ. பார்க்கப் போனால் நீ கொடுத்த அந்த நகைகளைக் கொண்டுதான் எனது நிறுவனம் இவ்வளவு தூரம் வளர்ந்திருக்கிறது. உனது நம்பிக்கைக்கு என்னைப் பாத்திரமாக்கிக் கொள்ள முயல்வேன்!''

இந்திரஜீத் இப்படிக் கூறிக் கொண்டிருக்கும்போது, ''சார், தந்தி!'' என்ற குரல் கேட்டது. அதை வாங்கிப் பிரித்துப் பார்த்தவன், ''நம்பிக்கை மோசம் செய்துவிட்டான்!'' என்று வெடித்துப் பொருமினான்.

''யார்?''

''என் மைத்துனன் அவினாஷ்! அவனை நம்பி 'பிளாங்க் செக்'குகளில் கையெழுத்துப் போட்டுக் கொடுத்து விட்டு வந்தேன். இப்பொழுது சிப்பந்திகளுக்குச் சம்பளம் கொடுக்கக்கூடப் பணம் இல்லையாம். தொழிற்சாலையை மூடவேண்டிய நிலையாம்! நான் இப்பொழுதே ஊருக்குத் திரும்ப வேண்டும்!''

''விதியை யாரே தடுக்க முடியும்?'' — வேதாந்தம் பேசி விடையளித்தாள் ரமா.

அந்த விதி அவனையும் விட்டுவைக்கவில்லை. கூண்டேறி இந்திரஜீத்தின் சார்பில் சாட்சி சொல்ல வைத்துப் பல ஐயங்களைக் கிளையவும் வைத்தது.

ஊர் திரும்பிய இந்திரஜீத்துக்கு இடிமேல் இடியாகப் பல இடிகள் காத்திருந்தன. அவினாஷின் மேல் ஆத்திரத்தைக் கொட்டப்போய் அவன் தன் தங்கையின் செவிகளில் உரையேற்றி அவள் மனத்தைத் திரித்து விட்டிருந்தான். 'உன் கணவனுக்குத் தில்லியில் ரோஸி என்ற நாட்டிய நங்கையோடு நெடு நாட்களாகவே கூடா நட்பு உண்டு. பெருந்தொகையை அவள் பெயருக்கு மாற்றிவிட்டு என்னைக் குற்றவாளியாக்கி யிருக்கிறான்' என்று அவன் கூறியது நம்பும்படியாகவே இருந்தது. அதோடு இந்திரஜீத்தின் தம்பி தேவஜீத்தின் மனத்தைக் கலைத்துப் பாகப் பிரிவினைக்கு வழக்குத் தொடரும்படியாகவும் செய்திருந்தான்.

இத்தனைக்கும் விதாயம் காணத்தான் ரமா கூண்டேறினாள். ஐயம் தீர்ந்த கமலாவுக்கு அவனையும் அவள் குழந்தையையும் காண வேண்டும் என்ற ஆசை. குழந்தைக்கு இந்திரஜீத் 'அப்பா' என்றால் கமலா என்ன உறவு ஆக வேண்டும்? எனவே அவர்களைக் கண்டுவரப் புறப்பட்டாள் இந்திரஜீத்துடன்.

''ஆன்ட்டி! அப்பாவும் அம்மாவும் என்னைப் பார்க்க வரப்போறாங்களே! நீ ஒளிஞ்சிக்கோ. நான் ஒரு வேடிக்கை பண்ணி அவர்களை அழவைக்கிறேன். அப்புறமாச் சிரிக்க வைக்கலாம்!'' என்றாள் குழந்தை.

குழந்தையின் வேடிக்கைக் கூற்றில் உள்ள நியாயத்தைக் கண்ட ரமா ஒளிந்துகொண்டாள்.

ஒளிந்து கொண்டவள், கணவன் — மனைவியை அந்நியோந்நியமாக்கிக் குழந்தையையும் அவர்களிடத்தில் ஒப்படைத்த பின், இனித் தன் குறுக்கீடு கூடாது என்ற முடிவுக்கு வந்தாள். அவள் வெளியேறுமுன் எழுதிவைத்த கடிதம் இதுதான்: ''உண்மையான நெஞ்சத்துக் காதல் உடல் உறவுக்காக ஏங்கி அலைபாய்வதில்லை. இதனை ஒன்று சேர்ந்த நம் உள்ளங்கள் உணரும். விதி வசத்தால் நான் கெட்டவள் என்று பெயர் எடுத்தாலும் உள்ளத்தால் கெடாது ஒழுகினேன் என்பதை என் அழியாக் காதல் எனக்கு நினைவுறுத்திக் கொண்டே யிருக்கும். ஆயினும் விதியின் கைப்பொம்மையாகி ஆடிய என்னை, உலகம் நடத்தை தவறியவள் என்றே தூற்றும். இது எனக்கு விதி வழங்கிய சாபக்கேடு.''

கடிதத்தைக் கண்டு கண் கலங்கிய இந்திரஜீத் குழந்தையின் மனம் கோணாமல் இருக்கச் சிரித்தபொழுது அங்கே மூவகை நகை இழையோடியது.

---

''சரித்ராஹீன்'' சக்தி சாமந்தாவின் படம். ஷர்மிளா தாகூர், சஞ்சீவ் குமார், உத்பல்தத் முதலியோர் நடித்தது. படத்தைப் பற்றி விசேஷமாகப் பாராட்டிச் சொல்ல ஏதுமில்லை.

# காதல் என்றால்......



★ தினமும் மாலை நேரம் கல்யாணி, மோகனம், தோடி போன்ற ராகங்கள் அந்தக் குரலில் இழைந்து இனிமையாகிக் கொண்டிருந்தது. எனக்கு அந்தப் பாடகரைத் தரிசிக்க வேண்டும் போல் இருந்தது. ஒரு நாள் ஏதோ வாங்கும் சாக்கில் அவர்கள் வீட்டுக்குப் போனேன். அந்தப் பாடகருக்கு இருபத்தைந்து வயது இருக்கும். மூடிய அவர் விழிகளிலிருந்து தாரை தாரையாக நீர் வழிந்தோடிக் கொண்டிருந்தது. நான் வீட்டுக்குப் போவதையும் மறந்து அங்கேயே நின்றுவிட்டேன். மணி எட்டு ஆனதும் 'சாப்பிட வா' என்று அவருடைய தாயார் அவரைத் தூக்கிவிட்டார். என் கண்கள் நிலைக்குத்தி நின்றன. தொடைக்குக் கீழ் அவருடைய இரண்டு கால்களும் தொங்கிக்கொண்டிருந்தன. வீட்டுக்கு வந்த நான் அன்று முழுவதும் அழுதேன். மறு நாளும் அங்கு சென்றேன். இசையமுதைக் கேட்டதும் என் மனம் தெளிவடைந்தது. எங்கள் இருவர் மனமும் ஒன்றியது. இதை என் பெற்றோர் எதிர்த்தனர். 'இரு காலும் இல்லாத நொண்டிப் பயலைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாளாம்' என்று ஊரார் கேலி பேசினர். நான் செவி சாய்க்கவில்லை; சளைக்கவில்லை.

எங்களுக்குத் திருமணமாகி இன்று இருபது ஆண்டுகள் ஓடிவிட்டன. ஓய்வில்லாதபடி ஓடுகின்ற நதி கடலில் சேர்வது போல் என் அன்பு எனும் நதி கடலில் அவரைச் சேர்ந்தது.

நான் மருத்துவ மனையில் நர்ஸாகப் பணி புரிகிறேன். வீட்டுக்கு வந்ததும் அவருக்குத் தொண்டு செய்வதில் என் மனம் மகிழ்கிறது. அன்பின் முன்னே நானும் அவரும் ஒன்றுதேம். இப்போது உடல் நலமின்மையால் அவரால் பாட முடியவில்லை எனினும் எனக்கும் ஓரளவு கண் பார்வை குறைந்துவிட்டது என்றாலும் காலத்தால்கூடப் பிரிக்க முடியாது; அழித்தால்கூட அழிக்க முடியாது எங்கள் இருவரிடையே வளர்ந்த உறவை, அன்பை!

- திருமதி திலகம்

★ என்னுடைய திருமணம் காதல் திருமணம் அல்ல. பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட ஒன்று. இருப்பினும் நானும் என் கணவரும் எங்கள் திருமணத்தை, காதல் திருமணமாகவே மதிக்கிறோம். திருமணத்துக்கு முன்பு ஒருவரை ஒருவர் அறியாவிடினும், முறைப்படி என்னை அவர் பெண் பார்க்க வந்த தினத்திலிருந்து நாங்கள் ஒருவரை ஒருவர் காதலித்து வருகிறோம். திருமணத்துக்கு முன்பும், பின்பும் நாங்கள் இருவரும் சேர்ந்திருக்க எத்தனையோ தடைகள், தடங்கல்கள் ஏற்பட்டன. எங்களை ஒன்று சேர்க்குமாறுதான் நாங்கள் எப்பொழுதும் கடவுளைப் பிரார்த்திப்போம். அவரிடம் நான் கொண்டுள்ள தீவிரமான காதல்தான் எனக்கு அவரைக் காப்பாற்றிக் கொடுத்துக் கொண்டே வருகிறது. அவருடைய இன்பமே என் இன்பம் என நான் கருதுவதால், எத்தனையோ குடும்ப இடையூறுகளுக்கு இடையில் அவர் விருப்பத்துக்கிணங்க நான் மூன்று குழந்தைகளுக்குத் தாயான பிறகு உயர் பள்ளிப் படிப்பிலிருந்து ஆரம்பித்து இன்று ஒரு எம்.ஏ., பி.எடி. ஆகியுள்ளேன். அவர் சொற்படி சமீபத்தில் வெளி நாட்டில் ஒரு வருடம் தங்கி இருந்து வேலை பார்த்தேன். அங்கு இருக்கும் காலம் என்னுடைய தெய்வீகக் காதல்தான், என்னைக் காப்பாற்றியது. நான் அங்கு அசோக வனத்துச் சீதையைப் போல் இருந்தேன். என் கணவர் மனத்தளவில் என்னுடன்தான் இருந்தார். நான் திரும்பித் தாயகம் வந்ததும் அவர் சொன்ன முதல் வார்த்தை - 'கண்ணம்மா இத்தனை நாள் என் மனத்தில் ஒரு சூன்யம் இருந்தது. அது இன்று நிறைந்துவிட்டது.' இதற்கு மேல் எங்கள் காதலுக்கு ஒரு சான்று வேண்டுமா?

- நீலா சுவாமிநாதன்

★ நான் எனது மனைவி சிவகாமசுந்தரியை முதன் முதலில் பார்த்தது இங்குள்ள ஸ்கந்தகிரி மலையில்தான். ஒரு நாள் கிருத்திகை அன்று கோவிலுக்குச் சென்றிருந்தேன்.

பிள்ளையாரைச் சுற்றிக் கொண்டு கல்யாண மண்டபத்தில் உள்ள 'கலைவைப் பெரியவாள்' படத்தருகில் கண் மூடி நின்று கொண்டிருந்தேன். கண்ணைத் திறந்தபோது, 'விபூதிக் கீற்றுடன்' கூடிய பளிச்சென்ற மங்களகரமான முகம் ஒன்று கண்டேன், சந்நியாசிக் கலர் புடவையுடன்.

பின் அம்மன், சிவன், சுப்பிரமண்யர் சந்நிதிகளைத் தரிசித்து வீடு வந்து சேர்ந்தேன். வீட்டில் 'பெரியவாள்' படத்தைப் பார்க்கும் போது எனக்கு அந்த விபூதிக் கீற்று முகம் தான் ஞாபகம் வரும். அடி மனத்தில் ஏதோ ஓர் ஏக்கம் இருக்கும்.

சில நாட்களில் திரு ம. பொ. சி. சொற்பொழிவாற்றிய இடத்தில், எனது நண்பன்



திரு ரங்கராஜனைச் சந்திக்க நேர்ந்தது. அவன் அழைப்பின் பேரில் அவனுடைய வீட்டுக்குச் சென்றிருந்தேன். அங்கு எனக்குக் காப்பி கொண்டு வந்திருந்த அந்த விபூதிக் கீற்று முகத்தைச் சந்திக்க நேரிட்டபோது, என் மனத்தில் ஏதோ 'குப்'பென்று அடைப்பது போல் தோன்றியது. ஆசாரியாளை நினைத்துக் கொண்டேன். பேச்சுவாக்கில் அது அவனுடைய தங்கை என்றும், திருச்சியிலிருந்து அவள் வந்திருக்கிறாள் என்றும் தெரிந்து கொண்டேன்.

பின் வீட்டுப் பெரியவர்கள் ஜாதகப் பொருத்தம் பார்த்துக் கல்யாணமும் நடந்தேறியது. இன்னும் அவளைப் பார்க்கும் போது — அவள் விபூதிக் கீற்று முகத்தைப் பார்க்கும் போது — அவள் எனக்குத் தருவது பேரின்பம் நிறைந்த மனச்சாந்தி — பெரியவாள் பக்கத்தில் இருக்கும்போது கிடைப்பது போன்ற சாந்தி.

இது ஏதோ 'ஸைக்கோ' கேஸ் என்று நினைக்க வேண்டாம். எங்கள் இல்லறம் சிறந்த நல்லறமாகவே விளங்குகிறது.

- போவாராம் வேணுகோபால்
செகந்திராபாத்

★ நான் பிராம்மண சமூகத்தில் தென்கலை அய்யங்கார் சமூகத்தைச் சேர்ந்தவன். என்

காதல் மலர்ந்த இதயத்தில் அம்மாதிரி ஈனமான எண்ணம் ஏற்படாது என்பதற்கு நான் சான்றாக இருக்கிறேன்.

- ஆர். சந்தானம்

★ நான் என் பெற்றோருடன் பழைய மாம்பலத்தில் குடியிருந்த வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் கமலா என்ற பெண் வந்து சேர்ந்தாள். நான் கொஞ்சம் ஒதுங்கிய சுபாவம் உள்ளவன். அவளுடன் பேசிப் பழக முற்படவில்லை. ஆனால் எப்படியோ என் மீது ஒரு பிடிப்பு ஏற்பட்டு விட்டதால் அவள் என்னை விடுவதாக இல்லை. நிழலாக என்னைத் தொடர்ந்தவள் அவளுடைய வலையிலும் சிக்க வைத்து விட்டாள்.

இருவரும் காதலர்களானோம். எதைப் பற்றியெல்லாமோ பேசுவோம், மதியம் இரண்டு மணி வெயிலில் மெரினாவில் உலாவுவோம், நிலவுகாய்வதாக நினைத்துக்கொண்டு! இருந்தாலும் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் எங்களை நாங்களே சிறைப்படுத்திக் கொண்டோம். சந்தர்ப்பச் சூழ்நிலைகள் சாதகமாக இருந்தும், நண்பர்கள் ஒத்துழைப்பு இருந்தும் நாங்கள் அமைத்துக் கொண்ட எல்லையைத் தாண்ட மனத்தால்கூட எண்ணவில்லை. திருமணம் செய்து கொள்வது என்றால் அது நம் பெற்றோர் சம்மதத்துடனும், உற்றார், உறவினர், நண்பர் முன்னிலையிலும்தான் நடக்க



னுடைய இருபத்தோராவது வயதில் என் நண்பன் ஒருவனுடைய தங்கையின் திருமணத்தில் எதிர்பாராதவிதமாக ஒரு பெண்ணைச் சந்தித்தேன். அதாவது கண்களால் பார்த்துக் கொண்டோம். அதுவரை எவ்வளவோ அழகிய பெண்களைச் சந்தித்திருந்தும், பெண்களை நண்பர்களாகக் கொண்டிருந்தும், மிகச் சாதாரணமான அழகுடைய அவளுக்கும் எனக்கும் ஏதோ ஒரு நெருக்கம் உள்ளதை உணர்ந்தேன்.

அன்று முதல் திருச்சியில் வேலை பார்க்கும் நான், வாரம் ஒரு முறை பத்து நிமிடங்கள் அவளுடன் பேச மட்டுமே, நூறு கி.மீ. தூரம் உள்ள மன்னார்குடிக்குச் சென்று வருவேன். எனக்கு என் வீட்டில் என் தந்தை பெரிய இடத்தில் பெண் பார்த்தபோது அவரோடு வாதிட்டுத் தோற்ற நான், பத்தாயிரம் ரூபாய் வரதட்சிணையுடன் வந்த மிக அழகிய பெண்ணை ஒதுக்கி, என் காதலி மாலதியை, அவளுடைய பெற்றோரின் சம்மதத்துடனும், என் பெற்றோர் சம்மதமின்றியும், சிக்கல் சிங்காரவேலன் சந்நிதியில் - நானும் என் காதலியும் வைணவ மதத்தவராயினும் - திருமணம் செய்து கொண்டேன். 16-7-74 அன்று நாகப்பட்டினம் பதிவாளர் அலுவலகத்தில் எங்கள் திருமணத்தைப் பதிவு செய்தோம். பணத்தையோ அழகையோ பெரிதாக நினைத்திருந்தேனானால், இவளைவிட அழகான, பணத்துடன் வந்த பெண்ணை மறு வார்த்தை கூறாமல் மணந்திருப்பேன். தெய்வ சங்கல்பத்தால்

வேண்டுமே ஒழிய ரிஜிஸ்தர் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது. அப்படி அவர்கள் சம்மதிக்காவிடில் கல்யாணம் ஆகாத நிலையிலேயே நம் வாழ்வை முடித்துக் கொள்ளலாம் என்பதே எங்கள் திட்டம்.

எங்கள் விஷயம் இரு குடும்பத்தாருக்கும் தெரிந்துவிட்டது. வழக்கம் போல் தடைகள் போடப்பட்டன. அவளைச் சொந்த ஊருக்கு அனுப்பத் திட்டமிட்டார்கள். என்னைச் சிலர் மூலமாக மிரட்டவும் செய்தனர். ஊஹூம்.. எதுவும் நடக்கவில்லை. திகைத்துப்போய்விட்ட இருவருடைய பெற்றோர்களும் கலந்தாலோசித்தார்கள். திருமணம் செய்து வைப்பதைத் தவிர வேறு எதுவும் வழி தோன்றவில்லை அவர்களுக்கு. பொறாமை கொண்ட அக்கம் பக்கத்துக்காரர்கள் திருமணத்துக்கு உள்ளர்த்தம் கண்டு ஒருவாறு பேசினார்கள். திருமணத்துக்கு மூன்று வருடங்கள் கழித்தே ஒரு பெண் குழந்தைக்குத் தாய் தந்தையானோம். இன்று வரை சிறுமனத்தாங்கல் கூடக் கிடையாது. ஒரு வேளை திருமணமாகுமுன்னரே, வரம்பு மீறியிருந்தோமானால் இந்த அளவு ஓர் அமைதியான வாழ்க்கை அமைந்திருக்காது என்று நம்புகிறேன்.

— வி. சுந்தரேசன்

# எல்லா விதத்திலும் சிறந்த பல்புகள்

பிலிப்ஸ்




# பிலிப்ஸ் பல்புகள்




பிலிப்ஸ்—லாம்ப் மற்றும் ஒளித்துறையில் முன்னோடிகள்

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

மடிப்புக் கலையாத சட்டை டையுடன் ஜம்மென்று உலவும் வாலிபருக்கு,

வணக்கம்.

நான் 'குபேரா பாங்க்' மவுண்ட்ரோட் கிளையில் வேலை பார்க்கிறேன்; பஸ்ஸை விட்டு இறங்கும்போதெல்லாம் தாங்கள் தட்டுப்படுகிறீர்கள். நானும் பல சமையல்காரர்களைப் பார்த்திருக்கிறேன், ஆனால் உங்களைப் போல் பார்த்ததில்லை!

பரிவாரம் புடைசூழ அரசன் செல்வது மாதிரி, முன்னே ஒருத்தர் உளுத்தம் பருப்பும் வெங்காயக் கூடையும் சுமந்து வர, பின்னே வேறொருத்தர் தக்காளிக் குவியலைக் கொண்டு வர, நீங்கள் அலங்கார உடையுடன் பவனி வருவது கண்ணுக்கு அழகாக இருக்கிறது. தாங்கள் எங்கு வேலை பார்க்கிறீர்கள்? தாஜ் மாதிரி பெரிய ஹோட்டலின் ஹெட் குக்கா? சம்பளம் எத்தனை? (ஏதாவது உண்டா? இல்லை. பருப்பு வகையறாவாகவே தந்துவிடுகிறார்களா?) அறிய ஆவல்.

ஸ்ரீமதி

அம்மணி ஸ்ரீமதிக்கு!

இப்போதெல்லாம் பாங்கில் வேலை புரியும் ஆண்களுக்குத் திருமண மார்க்கெட்டில் கிராக்கி அதிகம் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்; சம்பளம் அதிகமாம், ஆனால் நிச்சயம் பெண்களுக்கு இருக்காதென்றே தோன்றுகிறது. ஏனென்றால் வாய் அதிகம்!

தக்காளி, பருப்பு வகையும் என் டிரஸ்ஸும்தான் உங்கள் கண்ணில் பட்டனவா? வேறொன்று நான் எடுத்துப் போகிறேனே அது படவில்லையா? அது என்னவென்பதையும், என் உத்தியோகத்தையும் சொல்லி விடுகிறேன். முடியுமானால் உதவுங்கள்.

'கிரீஷ் அண்ட் கம்பெனியில் எனக்கு அஸிஸ்டெண்ட் வேலை. 'கிரீ–மிக்ஸ்' என்ற புதிய சாதனத்தை மார்க்கெட்டில் கொண்டு வந்திருக்கிறோம். (செப்டம்பர் மாதத்துக்குள் குறைந்தது இருநூறாவது விற்றாக வேண்டும்). ஒவ்வொரு ஆபீஸிலும் 'மிக்ஸை'க் கொண்டு போய்ப் பருப்பு, தக்காளி எல்லாம் அரைத்து, பிழிந்து, சட்னி–ஜூஸ் பண்ணி 'டெமான்ஸ்டிரேட்' செய்து காட்டுவது என் வேலை. எல்லோரும் சட்னியையும்ஜூஸையும்



தமயந்தி

# காதல் 'மிக்ஸ்'!



சுவைத்து நாக்கைச் சப்புக் கொட்டுகிறார்களே தவிர, 'மிக்ஸி'க்கு ஆர்டர் தருபவர்கள் மிகச் சொற்பம். ஆபீஸ் மானேஜரோ என்னை விரட்டு விரட்டென்று விரட்டுகிறார். பெங்களூரில் நிறைய விற்பனை ஆகிறது என்கிறார். ''அங்கு நல்ல பெரிய தக்காளியாக இருக்கும்' என்று ஜோக் அடித்தேன். ''விற்பது மிக்ஸ் தானே! தக்காளி இல்லையே?'' என்று அவர் பதிலுக்குக் கோபித்தார். என் வேலை இப்படி ஆகிவிட்டது. என்ன செய்வது! ஒருவேளை நீங்கள் சொன்னமாதிரி பெரிய ஹோட்டலின் ஹெட் குக்காக இருப்பதே மேல் போலிருக்கிறது!

தங்கள் உண்மையுள்ள
ஜி. எம். காமேசுவரன்

பி. கு.: குபேரா பாங்கில் வேலை செய்வதாகச் சொல்கிறீர்கள். அங்கு சோதனை செய்து காட்ட வசதி பண்ணித் தர முடியுமா? எங்கள் 'கிரி-மிக்ஸ்' வெட் அண்ட் டிரை க்ரைண்டர்கொண்டது. விலையோ மிக மலிவு. வீட்டின் அரைக்கும் பணியில் (சட்! ரேடியோவில் விளம்பரம் ஒன்று கொடுத்தாலும் கொடுத்தோம் அதே நினைவு!) நேரில் சந்தித்தால் விரிவாக விளக்குகிறேன்.

மிஸ்டர் காமேசுவரன்!

கமா சுவரன் என்றே பெயர் வைத்துக் கொண்டு இருக்கலாம். சீக்கிரம் முடிக்காமல் தொடர்ந்து கொண்டே போகிறீர்களே!

நிற்க, தக்காளி ஜாஸும், வெங்காயச் சட்னியும் நாக்கில் நீர் ஊற வைக்கின்றன. 'மிக்ஸி'ன் விளம்பரம் பேப்பரில் கூடப் பார்த்தது நினைவுக்கு வருகிறது. அது சரி, இப்போதுதான் ஒரு பொருள் வாங்கினால் கிஃப்ட் கூப்பன், போனஸ் என்றெல்லாம் கூடவே தருகிறார்களே, 'கிரி-மிக்ஸா'டன் என்ன தருவீர்கள்?
ஸ்ரீமதி

ஓ! ஸ்ரீமதி! (ஓசி) மதி!

சட்! ஏன்தான் இப்படி ஓசி ஓசி என்று பறக்கிறீர்களோ!

குடும்பப் பெண்ணின் சுமையைக் குறைக்க அன்றாடக் காரியங்களை இலகுவாக்க ஒரு சாதனம் கொண்டு வந்துள்ளோம். அதற்கு என்ன 'போனஸ்' எதிர்பார்க்கிறீர்கள்? (30–9க்குள் வாங்கினால் ரூ. 100 ரிபேட் தருகிறோம், கவனிக்கவில்லையா?) வேண்டுமானால் எங்கள் முதலாளியிடம் சொல்லி ஒரு கிலோ வெங்காயம் இலவசமாகத் தர ஏற்பாடு செய்கிறேன். (பெண்களுக்கு வெங்காயமும் தேவையில்லை. அதுதான், காரியம் ஆக வேண்டுமென்றால், தானாகக் கண்ணீர் வந்து விடுகிறதே!)

எங்கள் தயாரிப்பின் விற்பனைக்கு உதவுங்கள்.
காமேசுவரன்.

ஸ்ரீ காமேசுவரன் அவர்களுக்கு,

தங்கள் நிலையை நினைத்தால் எனக்கு இரக்கமாகவே இருக்கிறது. எங்கள் ஆபீஸ் டெபுடி ஜி. எம்.மிடம் சொல்லி வைக்கிறேன். நீங்களும் நேரில் வந்து பேசித் தொடர்புகொண்டு–ம் அப்புறம் உங்கள் சமர்த்து!

எதற்கும் நிறைய வெங்காயம் கொண்டு வரவும். பிற்பகல் 1–2 ஜடியல் டைம். ஆபீஸில் எல்லோரும் டிபன் சாப்பிட்டுக் கொண்டிருப்பார்கள். தொட்டுக்கொள்ள உதவியாயிருக்கும்.
ஸ்ரீமதி.

ஸ்ரீமதிக்கு,

போன வியாழக் கிழமை 'அப்பாயிண்ட்மெண்ட்' 'பிக்ஸ்' பண்ணி உங்கள் பாங்குக்கு வந்தேன். சோதனை செய்தும் காட்டினேன். சொன்னால் கோபித்துக் கொள்ளக் கூடாது. சரியான பறக்காவெட்டிகள்!

வெங்காயச் சட்னிக்கும் தக்காளி ஜாஸுக்கும் என்னமாய்ப் பறந்தார்கள்! ''இன்னும்!

இங்கே சார் கொஞ்சம்!'' என்று பெருமாள் கோவில் பிரசாதத்துக்குக் கை நீட்டுவது போல் நீட்டினார்கள். (நானும் ஊகித்துக் கொஞ்சம் தாராளமாகவே கொண்டு போயிருந்தேன்.) ஒருத்தி சட்னியை ருசி பார்த்துவிட்டு, அப்புறம் 'ஐயோ, ஐயோ' வென்று கத்தினாள். ரொம்பக் காரமாக இருக் கிறதா என்று கேட்டால், என்ன பதில் வந்தது தெரியுமோ? அன்று அமாவாசை யாம். தெரியாது வெங்காயம் சாப்பிட்டு விட்டாளாம். 'ட்ரை' க்ரைண்டரில் காப்பித் தூள் அரைத்துக் காண்பித்தபோது, அதை யும் மாதிரிக்கு வைத்துக் கொண்டார்கள். கால் அடுப்பு மட்டும் ஆபீஸில் இருந்ததோ, தோசையும் வார்த்துப் பார்த்திருப்பார்கள் போலிருக்கிறது!

இருக்கட்டும். என் வருத்தம், சந்தேகம் எல்லாம் வேறு —

ஒன்று எல்லாரும் ருசித்துப் பாராட்டினார் களே தவிர, கடைசியில், ''மேடம்! ஏதாவது ஆர்டர் தாருங்களேன்!'' என்று கேட்ட போது, ஒருத்தர் ஒருத்தராய்ப் பின்வாங்கி னார்கள். ''இந்த மாசம் ஏகப்பட்ட செலவு!'' என்ற வழக்கமான சூள் கொட்டல்! ''என்ன வேணுமானாலும் சொல்லுங்கள், ஆட்டுக் கல்லில் அரைத்துச் சாப்பிடுகிற மாதிரி இதில் இல்லே!'' என்ற ஓர் அபிப்பிராயம். இது பற்றி ஒரு விளக்கம்: இதற்கு மனசு தான் காரணம். அளவான சிறு குடும்பத் துக்குத் தேவையான மாவை எங்கள் மிக்ஸ் அரைத்துக் கொடுக்கும். ஆக, மறைமுகமாகக் குடும்பக் கட்டுப்பாட்டுக்கு உதவும் மிக்ஸ்— எங்கள் 'மினி-மிக்ஸ்') ''இந்த மிக்ஸ் போடற சப்தத்திலே குழந்தை அழறதோ ரேடியோவோ கேட்பதே இல்லே!'' என்று வேறொரு குறை. (அது உங்களுக்குச் சௌகரி யம்தானே? சளசளவென்று வம்பு அளந்து கொண்டே மாவு அரைக்கலாமே! மிக்ஸ் ஒலியில் உங்கள் பேச்சு வெளியே கேட்காதே!)

இரண்டு. பேச்சு வாக்கில் உங்களைப் பற்றி விசாரித்தேன். லீவு என்றார்கள். நான் வருகிற அன்றைக்குப் பார்த்தா 'லீவு' போட வேண்டும்! என்மீது கோபமா? எங்கள் மிக்ஸ் மேல் கோபமா? உடன் பதில்.

ஜி. எம். காமேசுவரன்

காமேசுவரன் அவர்களே!

உங்கள் 'மிக்ஸ்' விற்பனை ஆகிறதோ இல் லையோ, அந்த பிராண்ட் மீது உங்களுக்கு அசாத்திய மோகம் போலிருக்கிறது. பெய ருக்கு முன்னால், ஜி. எம். என்றே வைத்துக் கொண்டிருக்கிறீர்களே!

ஆபீசில் தாங்கள் செய்த பிரதாபச் செயல்களை யெல்லாம் சிநேகிதிகள் சொன் னார்கள். மாவில் அரிசியை விட உளுந்து அதிகமாகி விட்டதாம். தக்காளி ஜாமில் சர்க்கரை குறைவாம். விடுங்கள் — அவர் களுக்கு நாக்கு நீளம் (ஐ மீன் — சமையலில் ருசி பார்ப்பதில்தான்!)

நீங்கள் வந்த நாள் அன்று என்னால் இருக்க முடியவில்லை. ஒரு நாள் என் வீட்டுக்கே வந்து ஏன் முயற்சி செய்யக் கூடாது? விலா சம் இதோ — சிவராமன், 12, மூன்றாவது கிராஸ் தெரு, அபிராமபுரம். என் தகப்ப னாருக்கு இதில் அவ்வளவாகப் பிடித்தம் கிடை யாதுதான். இருந்தாலும் அண்ணா இருக் கிறான் 'டிரை' பண்ணுங்களேன். (கூடவே பருப்பு, வெங்காயம் எதுவும் கொண்டு வர வேண்டாம். எங்கள் வீட்டிலேயே இருக்கும்)

வீட்டில் நேரில் சந்திக்க ஆவல். —ஸ்ரீமதி.

ஸ்ரீமதி!

முதலில் உங்கள் சந்தேகத்துக்கு என் விளக் கம். ஜி. எம். என்பது கோபாலசமுத்திரம் மகாதேவன் என்பதன் சுருக்கமே தவிர, நீங்கள் நினைப்பது போல் அல்ல. (நீங்கள் சொன்ன பிறகுதான் அந்த ஒற்றுமை எனக்கே தெரிகிறது).

ஒரு விஷயத்தை மட்டும் நான் மகிழ்ச்சி யுடன் ஒப்புக்கொண்டாக வேண்டும். உங்கள் பாங்குக்கு வந்து சோதனை செய்து காட்டிய பிறகு 'மிக்ஸ்' பிரபலம் ஆகிவிட்டது. ஏகப் பட்ட பேர் போன் செய்து கேட்கிறார்கள். மடமடவென்று விற்பனை கூடுகிறது. உங்கள் சிநேகிதிகள் தங்களுக்குத் தெரிந்த நிறையப் பேரிடம் சொல்லி யிருக்கிறார்களோ என் னவோ! எனவே, மெனி தாங்க்ஸ்!

வீட்டில் ஞாயிற்றுக்கிழமை சந்திக்கிறேன்.

காமேசுவரன்.

அவசர அஞ்சல்

ஸ்ரீமதிக்கு,

நான் சொன்னபடி ஞாயிற்றுக்கிழமை வீட்டுக்கு வந்தேன். அந்தக் குறிப்பிட்ட சமயத்திலும் உங்களைக் காணோம். (நான் வருகிறபோது இருக்கவே கூடாது என்று ஏதாவது விரதமா என்ன?)

உங்கள் தகப்பனார் 'உர்'ரென்றும் அிரத் தையாகவும்தானிருந்தார். ''என்ன சார் 'மிக்ஸ்' அது இதுவென்று! என்ன ஆனாலும் அம்மி ஆட்டுக்கல்லில் அரைப்பது மாதிரி ஆகுமோ?'' என்று அலுத்துக் கொண்டு சொன்னார். ''ஆகாதுதான், அது தாமதம் ஆகும், இந்த 'மிக்ஸ்' க்விக்!'' என்று பதில் சொன்னேன். அதிகப்பிரசங்கித்தனமாக இருக்குமோ என்று பயந்தேன். நல்ல காலம், உன் அப்பா அவ்விதம் எடுத்துக் கொள்ள வில்லை.

உன் அண்ணா, மன்னி இரண்டு பேர் மட் டும் அதிதீவிர அக்கறை எடுத்துக்கொண் டார்கள். ஆயிரத்தெட்டுக் கேள்விகள் கேட் டார்கள். கடைசியாகக் கிளம்புகிற சமயத் தில் உன் அண்ணா ஒரு வேண்டுகோள் விட்



காதல் தெய்வீகமாக இருக்கலாம். தெய்வத்தின் சித்தத்தில் எத்தனை மர்மமோ அத்தனை மர்மமா யிருக்கிறது காதல் என்பதும். - கல்கி

உயிர்களிடத்தில் அறத்துக்கு மாறுபாடில்லாத காதல் நான். -பகவத்கீதை

# புதிய அனுபவம், பேரானந்தம்



ADROIT/925

செஞ்சுரி
பருத்தித் துணிகள்



செஞ்சுரி -100% பருத்தித் துணிகள்

தி செஞ்சுரி ஸ்பின். அண்டு மான்யு.
கம். லிமிடெட், பம்பாய்-400 025

# ஒரு நாளைக்கு ஒரு ரூபாயை ஒதுக்கி உங்கள் கவலைகளைப் போக்குங்கள்

வெகு சீக்கிர மென்றோ, தாமதமாகி விட்ட தென்றோ எண்ண வேண்டாம். ஒரு நாளைக்கு ஒரு ரூபாய் என்று சிறிய அளவில் கூட நீங்கள் சேமிக்கத் தொடங்க காலம் கடக்கவில்லை. சீக்கிரத்தில் உங்கள் சேமிப்பு உங்களுக்கு பாதுகாப்புடன், மகிழ்ச்சிகரமான நிதியையும் அளிக்கிறது.

சேமிப்பதற்கு யூகோபாங்க் உங்கள் அருகாமையில் உள்ள வசதியான பாங்க்

விவரங்களுக்கு உங்கள் அருகில் உள்ள யூகோ பாங்க் கிளையை அணுகவும்



**யுனைடெட் கமர்ஷியல் பாங்க்**

UCOC-52A TAM

சுலபமாக வெற்றி பெறும் காதலில் கவர்ச்சி இல்லை; தடைகள்தான் காதலுக்கு அதிக மதிப்பைக் கொடுக்கின்றன. -வோகல்

காதல் சம்பந்தப்பட்டவரை பெண் வீணையைப் போன்றவள். தந்திகளை மீட்டத் தெரிந்தவனுக்குத் தான் வீணை தன் ரகசியங்களை வெளியிடும். -பால்ஸாக்

- எஸ். ஆர்.



✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖

டாரே பார்க்க வேண்டும்! ''இந்த மிக்ஸை இரண்டு மூன்று நாள் வைத்து விட்டுப் போங்கள். உபயோகப்படுத்திப் பார்க்கிறோம். திருப்தியானால் வாங்குகிறேன்!'' என்றார். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. இது மாதிரி இந்நாள்வரை யாருமே கேட்டதில்லையே! இது என்ன சித்த வைத்திய தபால் விளம்பரமா — திருப்தி இல்லையென்றால் வாபஸ் என்பதற்கு! கடைசியில் யோசித்து முடிவுக்கு வந்தேன். ஒருவேளை ஏதாவது பழுது ஏற்பட்டால் நானே வாங்கிக்கொண்டு விடலாம் என்ற எண்ணத்தில் ஒப்புக்கொண்டு விட்டேன்.

வேறு இரண்டு காரணங்களும் உண்டு:

மறுபடியும் ஒரு தரம் உங்கள் வீட்டுக்கு வரலாம்.

என்னைத்தான் நீங்கள் 'ஆக்ஷனில்'(?) பார்த்ததில்லை. அட்லீஸ்ட் மிக்ஸையாவது பார்க்கலாமே!

காமேசுவரன்

பி.கு.: திருப்திதானே? ஆர்டர் எடுத்துக் கொள்ளட்டுமா?

ஓய் மிஸ்டர் காமேசுவரன்!

என்ன போக்கிரித்தனம் இது!

ஊருக்கெல்லாம் 'மிக்ஸ்' 'மிக்ஸ்' என்று விற்பனை செய்யும் நீர், சொந்தமாக ஒன்று வைத்துக் கொள்ளவில்லையா? அரசியல்வாதி போல் என்ன இது அநியாயம்? —ஸ்ரீமதி.

ஸ்ரீமதி!

அவசரப்பட்டு முடிவுக்கு வந்துவிடாதீர்கள். நான் பிரம்மச்சாரிக்கட்டை. 'மிக்ஸ்' எனக்கு அவசியம் இல்லை. தேவையில்லாத பொருளை வாங்காதிருப்பதே இன்று நாட்டுக்கு நாம் செய்யும் சேவை அல்லவா?

புதன் அன்று நேரில் சந்திக்கிறேன்.

காமேசுவரன்.

மிஸ்டர் 'காம' ஈசுவரன்!

உங்களைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. அடடா, என்ன அமைதி! என்ன அமைதி! ('மிக்ஸ்'-டன் பழகிப் பழகி அதன் சத்தமே போதும் என்று உணர்ந்துதான், அமைதியையும் நிதானத்தையும் கடைப்பிடிக்கிறீர்களோ?)

என் வீட்டில் ஒரு சின்ன தர்ம சங்கடச் சிக்கல் இருந்து வந்தது. அதை இப்போது உடைத்து விடுகிறேன். என் மன்னிக்குச் சமைக்கத் தெரியாது. நான்தான் எப்படியோ 'மானேஜ்' செய்து கொண்டு வருகிறேன். (பண்டிகை நாட்களில் அண்ணா சமையலுக்கு ஆள் நியமித்து விடுவான்). எனக்குச் சீக்கிரம் கல்யாணம் முடித்துவிட வேண்டும் என்று அப்பா அவசரப்படுகிறார். கல்யாணமாகி விட்டால் சமையலுக்கு என்ன செய்வது என்று அண்ணாவுக்குக் கவலை! (நீங்கள் வீட்டுக்கு வந்தபோது, நான் இல்லாததற்குக் காரணம் இந்த வாக்குவாதம்தான்!)

மேற்படி சிக்கல் இப்போது தீர்ந்து போய் விட்டது. வாடகைக்கு விடுகிற மாதிரி இரண்டு நாள் 'மிக்ஸை' வைத்து விட்டுப் போனாலும் போனீர்கள். மன்னிக்குச் சமையலில் ஈடுபாடு வந்து விட்டது. சிரத்தையுடன் என்னிடம் கற்றுக் கொள்ள ஆரம்பித்து விட்டாள். இன்னும் ஒரு மாதத்தில் என் உதவி இல்லாமலே சமைக்கும் அளவுக்குத் தேர்ச்சி அடைந்து விடுவாள்.

''இனிமேல் என்னடா! வசந்தாவுக்குச் சமைக்கத் தெரிந்துவிட்டது! ஸ்ரீமதிக்கு வரன் பார்க்கலாமே!'' என்றார் அப்பா அண்ணாவிடம் — நீங்கள் வந்து போன பிறகு.

அண்ணா 'மிக்ஸை'யே பார்த்துக் கொண்டிருந்தான். அதன் மீது அன்பும் பாசமும் அவனுக்குப் பெருக்கெடுத்தது. ''இரி-மிக்ஸ்'' என்றான்.

''என்னடா சொல்றே! அந்த 'மிக்ஸ்' ரெப்ரசென்டேட்டிவ் காமேசுவரனையே பார்க்கலாம் என்கிறாயா?'' என்றார் அப்பா.

இனி உங்கள் சாமர்த்தியம்! (மிக்ஸ் விற்பது போல் மசமசவென்று இருக்காதீர்கள்! தேவை: சுறுசுறுப்பு!)

அன்புள்ள ஸ்ரீமதி.

ஸ்ரீமதி! என் அன்பே!

உன் வீட்டுக்கு வந்தேன். பெரியோர்களிடம் கலந்து பேசினேன். டீ நாட் கெட் வெக்ஸ்ட்; மேரேஜ் ஃபிக்ஸ்ட்; காரணம் மிக்ஸ்!

என்றும் உன் காமேசுவரன்.

'இரீஷ் அண்ட் கம்பெனியிலும், குபேரா பாங்கிலும் ஒரே நாளில் வினியோகிக்கப் பட்ட திருமண அழைப்பிதழில் காணப்பட்ட ஒரு முக்கிய குறிப்பு:

'மிக்ஸ்' அன்பளிப்பு மட்டும் வேண்டாம்!

✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖✖

**காதல் ஆராய்ச்சி!**

அமெரிக்காவில் மின்னஸோட்டா பல்கலைக் கழகத்தில் காதல் பற்றிய ஆராய்ச்சிகள் நடத்த ஒரு புரொபஸரை நியமித்திருக்கிறார்கள். அதற்காக 5,88,000 ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள்!



ஆதாரம்: ''லிங்க்''

தகவல்: சரோஜா ராமச்சந்திரன்

## காதலுக்கொரு கல்லறை

அன்றொரு காலம் அலைத்திரள் மோதும்
குன்றிடை யமைந்த குடிலிடை யமர்ந்து
தென்றல் தழுவச் செந்தமிழ் பயின்ற
அகத்தியன் முதலாய் ஆயிரமா யிரம்
இலக்கியப் புலவர்கள் இயம்பும் காதலை
நானும் வடிக்க நாட்டினேன் எழுதுகோல் !

மயக்கம் நிறைந்த மாயக் கானலை
பித்தம் நிறைந்த பெரியதோர் உணர்ச்சியை
போதை மிகுந்த பொல்லாக் கவர்ச்சியை
இத்தனை யாண்டுகள் இன்ப நுகர்ச்சியில்
கண்டபிற் பாடு காதலை என்சொல !

உடலின் உணர்வே ஓங்கா திருக்கும்
இளம்பரு வத்தின் இன்னிசை காதல் !
கண்கள் இரண்டும் கரைபுரண் டோடி
காணு திருந்தால் கனவிடை யாடி
பெண்ணின் மேன்மை பெருமிதம் உணர்ந்து
உள்ளுணர் வாலே உவப்பது காதல் !
காமம் என்பது கடுகளவேனும்
காணு நிலையிற் கனிவது காதல் !

பார்வை புன்னகை பணியும் நாணம்
பாரா ததுபோல் பார்க்கும் மென்மை
தேரா நிலையில் திணறும் மூச்சு
தானே தனக்குள் தவிக்கும் பேச்சு
உளறல் உயிர்த்தல் உளமெலாம் வியர்த்தல்
நனவே கனவாய் நலியும் தன்மை
தூதொன் றின்றித் துயருறும் விம்மல்
இவையே மானிடர் இலக்கியக் காதல் !

அந்தக் காலம் ஆற்றங் கரையிலும்
மந்திக ளாடும் மாந்தோப் பினிலும்
கோவில் விழாவிலும் குளத்தங் கரையிலும்
புனிதக் காதல் பூத்துக் கனிந்தது !

இன்றையக் காதலை என்சொல? என்சொல?

நாணமி ழந்து நலத்தையு மிழந்து
காணும் பொழுதே கண்ணடியடித்து
கடிதம் எழுதிக் கையிலும் கொடுத்து
ஓடிச் சென்று ஓட்டலிற் புகுந்து
இருட்டில் ஆடி இன்பம் நுகர்ந்து
திருட்டுத் தாலியை தெய்வசந் நிதியில்
கட்டிக் கொள்வதே காதலென் றானது !

பழநாள் வாழ்ந்த பண்புறு காதல்
இயங்கும் ஆயின் இனிதே மலருக !
கல்லும் கல்லும் காதல் புரியும்
பொல்லாக் காதல் போய்ஒழிந்திடுக !
செத்த மானிடச் சிவனுக் கெல்லாம்
கல்லறை காணும் கலிகா லத்தீர்
இன்றையக் காதலை இறக்கி வைக்கவும்
கல்லறை யொன்றைக் காணுக விரைவில் !

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

தேவைகளை சொந்தமாகப் பூர்த்தி செய்வதை நாங்கள் வலியுறுத்துவது எஃகுத் தயாரிப்புத் துறையுடன் மட்டும் நிற்கவில்லை.

ஆதித்யபூரில் உள்ள எங்களது மாபெரும் பராமரிப்புத் தொழிற் கூடம் ஒன்றிலேயே நாங்கள் சிக்கலான மிஷின்களையும் துணை பாகங்களையும் சொந்தமாக உருவாக்குவதன் மூலம் இவற்றின் இறக்குமதியைத் தடுத்து ஆண்டுதோறும் தேசத்திற்காகப் பெருமதிப்புள்ள அன்னியச் செலாவணியை மீதப்படுத்துகிறோம்

ஆண்டுகள் பல உருண்டோடினும், நாங்கள் இளமை குன்றாது திறம்படச் செயல்படுவதற்கு இது ஓர் சீரிய எடுத்துக்காட்டாகும்

தேவைகளை சொந்தமாகப் பூர்த்தி செய்யும் துறையில் நாங்கள் வளருகிறோம்.

# எஃகினை யொத்த உறுதியான குறிக்கோள்



டாடா ஸ்டீல்

TSL 8730

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)

# அன்புள்ள பாம்பே டையிங்




இதோ 'ஐடியா' தயார்! கிளுகிளுப்பூட்டும் பிங்க்கும் நீலமும் இணைந்த ஹால்ட்டர் அணிந்து கொள். இதிலுள்ள பாம்பே டையிங் பிரிண்டுகள் வெகு எடுப்பானவை. பார்ட்டிக்கு வந்திருப்பவர்கள் உன் அழகில் எப்படி சொக்கிப்போய்த் திணறுகிறார்கள் என்று பார்!

பாம்பே டையிங்கின் எங்கும் அணிந்து மகிழக்கூடிய துணித்தரங்கள் : ஸூப்பர் ஃபைன் பாப்ளின், லான், கெம்ப்ரிக், ரூபியா, 12 நவீன வண்ணங்களில் 'ப்ரஷ்ட்' டெனிம்கள், 100% பாலியெஸ்டர் ட்ரெஸ் பிரிண்டுகள்.

உனது ஃபாஷனில் அக்கறையுள்ள **பாம்பே டையிங்**

BD-8600